# ஸ்ரீ நீலிந்தேந்திர ஸ்துதி மஞ்சரீ



சாகம்பரீ



ஸ்ரீமான் அப்பய்ய தீக்ஷிதாளர்கள்

# ஸ்ரீ தீக்ஷிதேந்திர ஸ்துதி மஞ்சரீ

அத்வைதம், சைவ வைணவ விசிஷ்டாத்வைதம்,
த்வைதம், சாக்தம், ஸௌரம் முதலிய மதங்
களை நிலைபெறச் செய்ய ச்ருதி ஸ்மிருதி,
புராண, ஆகமங்களை ப்ரமாணமாய்க்
கொண்டு நூற்று நான்கு கிரந்
தங்களை அருளிச் செய்த
ஸ்ரீமான் அப்பய்ய தீக்ஷித
ரவர்கள் இயற்றிய
ஸ்தோத்ரங்கள்
அடங்கியது.

மாயூரம் தர்மக்ஞ, வித்யாவாசஸ்பதி
M. ராமனாத தீக்ஷிதர்
அவர்களால் தொகுத்து வெளியிடப் பெற்றது

1976 விலை 1—25

முதல் பிரசுரம் 2000

விஷய அடக்கம் பக்கம்



கிடைக்குமிடம்

M. ராமநாத தீக்ஷிதர்

21-B, பீமண்ணை முதலி தெரு

ஆழ்வார்பேட்டை — மதராஸ் - 18

|| श्रीः ||




श्रीमत्परमहंस परिव्राजकाचार्यवर्य

श्रीमच्छंकर भगवत्पादप्रतिष्ठित

श्रीकाञ्ची कामकोटि पीठाधिप जगद्गुरु

श्रीमच्चन्द्रशेखरेन्द्र सरस्वती श्रीपादादेशानुसारेण

श्रीमज्जयेन्द्रसरस्वतीश्रीपादैः मायूरक्षेत्राभिजन धर्मज्ञ-ब्रह्मश्रीरामनाथदीक्षिताय क्रियते नारायण स्मृतिः ।

பரமேச்வரருடைய அவதாரமாக ஆவிர்ப்பவித்து அத்வைதம், விசிஷ்டாத்வைதம், த்வைதம், சைவம் முதலிய சாஸ்திர ஸித்தாந்தங்களைப் பற்றிய பல்வேறு நூல்களை இயற்றியுள்ள ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரர் அவர்கள் ஜனங்களிடையே பகவத் பக்தியை அபிவிருத்தி செய்வதற்காக பல்வேறு ஸ்தோத்ரங்களையும் இயற்றியிருக்கிறார்கள்.

இந்த ஸ்தோத்ர நூல்களை ஜனங்களிடையே ப்ரசாரம் செய்ய வேண்டும் என்னும் உயர்ந்த நோக்கத்துடன் தாங்கள் இவற்றை தமிழில் மொழி பெயர்த்து வெளியிட ஆரம்பித்து சிவ பெருமானைப் பற்றிய பஞ்ச ரத்ன ஸ்தவம், விரிஞ்சி புரத்தில் கோயிற் கொண்டுள்ள பெருமானைப் பற்றிய மார்க்க பந்து ஸ்துதி, தேவியைப் பற்றிய துர்க்கா சந்த்ர கலாஸ்துதி, பஞ்சபூத ஸ்தலங்களுள் தேஜஸ் ஸ்தலமான திருவண்ணுமலையில் விளங்கும் அம்பாளைப் பற்றிய அபீதகுசாம்பாஸ்தவம், சிதம்பரத்தில் விளங்கும் நடராஜ - கோவிந்தராஜப் பெருமான்களைப் பற்றியதும் சிவ - விஷ்ணு அபேதத்தை விளக்குவதுமான ஹரி ஹரா பேதஸ்துதி, சிவ - அம்பா - விஷ்ணு தத்வங்களை விளக்கும் ரத்ன த்ரய பரீக்ஷை இந்நூல்களுக்கு தமிழில் பொருள் - கருத்துக்களை எழுதி வெளியிட முன் வந்திருப்பதை அறிந்து ஸந்தோஷிக்கிறோம்.

தமிழறியும் ஆஸ்திகர்கள் இந்த நூலின் மூலம் பொருளுணர்வுடன் அந்தந்த பகவன் மூர்த்திகளை துதித்துக் கொண்டு இதன் மூலம் எல்லா மங்களங்களையும் அடைவார்களாக

யாத்ரா ஸ்தானம்<br>புரசைவாக்கம்<br>ராக்ஷஸ பால்குன சுத்த<br>த்விதீயை } நாராயணஸ்ம்ருதிঃ

உ

॥ ஸ்ரீ சிவாப்யாம் நம: ॥

# முகவுரை

दीक्षितोऽपि भवेत्कश्चित् मदंशो भूसुरोऽम्बिके ।
भासुराचारनिरतः शैवश्छन्दोग वंशजः ॥

என்று ஸ்காந்தம் சிவரஹஸ்ய கண்டம் 9 - அம்சம் 8 - அத்யாயத்தில் அம்பாளிடம் பரமசிவன் கூறியபடி, காஞ்சி மண்டலம் அடயப்பலம் கிராமத்தில் அவதாரம் செய்த ஸ்ரீமான் அப்பய்ய தீக்ஷிதரவர்கள் ஸ்ரீ பகவத் பாத ஆசார்யாளின் ஸித்தாந்தமான அத்வைத மதத்திற்கு நியாய ரக்ஷாமணி பரிமளம், ஸித்தாந்தலேச ஸங்கிரஹம் முதலிய அறிய கிரந்தங்களை இயற்றியுள்ளனர். சைவ ஸித்தாந்தத்திற்கு சிவார்க்க மணி தீபிகை. பிரம்ம தர்க்க ஸ்தவம், சிவதத்வ விவேகம் முதலிய கிரந்தங்களைச் செய்தார்கள். மற்றும் விசிஷ்டாத்வைத, த்வைத, சாக்த, ஸௌர சாஸ்திரார்த்தங்களின் நுட்பமான தத்வங்களை விளக்க பல நூல்கள் மொத்தம் 104, கிரந்தங்கள் இயற்றியுள்ளார்கள்

அவர்கள் அருளிய ஸ்தோத்ரங்களில் சிவபெருமானின் மஹிமையை விளக்குவதும் அம்பாளின் பெருமையை வர்ணிப்பதுமான, பஞ்சரத்ன ஸ்தவம், மார்கபந்து ஸ்துதி, துர்கா சந்திர கலா ஸ்துதி, அபீதகுசாம்பாஸ்தவம், ஹரி ஹரா, பேத ஸ்துதி, ரத்ன த்ரய பரீக்ஷை என்ற நூல்கள் இதில் அடங்கியுள்ளவை. ஹரி ஹரா பேத ஸ்துதி, ரத்ன த்ரய பரீக்ஷை க்ரந்தத்தில் சிவ விஷ்ணு பேத புத்தியை அகற்றி அபேதமாய் வழிப்படுவது அவச்யம் என்பதை விளக்கியுள்ளார்.

துர்கா சந்திர கலா ஸ்துதியை தினம் காலை மாலை ஜபிப்பவர் குடும்பத்தில் வறுமை மனக் கவலையில்லாமல் வாழுவர். அபீதகுசாம்பாள் ஸ்தவம் சீதஜ்வரத்தை நிவர்த்தி செய்யும் மற்றுமுள்ளதைப் பாராயணம் செய்து மனோபீஷ்டத்தை யடையுமாறு வேண்டுகிறேன். ஸ்ரீ காஞ்சீ ஜகத்குரு ஆசார்யாள் அருளுடன் வெளியிடப்படுகிறது.

குறுகிய காலத்தில் எளிய முறையில் அச்சிட்டுக் கொடுத்த லக்ஷ்மி விஜயம் பிரஸ் உரிமையாளருக்கும் இதற்கு ப்ளாக் உதவி செய்த விப்கோ பதிப்பகத்தாருக்கும் அம்பாளின் பரிபூர்ண கடாக்ஷம் ஏற்படுமாறு பிரார்த்திக்கிறேன்.

21-B, பீமண்ண முதலி தெரு
ஆழ்வார்பேட்டை, மதராஸ்-18.

மாயூரம்
M ராமனாத தீக்ஷிதர்

श्रीशिवाभ्यां नमः

॥ दुर्गाचन्द्रकलास्तुतिः ॥

# துர்காசந்திரகலா ஸ்துதி

वेधोहरीश्वरस्तुत्यां विहर्त्रीं विन्ध्यभूधरे
हरप्राणेश्वरीं वन्दे हन्त्रीं विबुधविद्विषाम् ॥ १ ॥

வேதோ ஹரீச்வரஸ்துத்யாம்
விஹர்த்ரீம் விந்த்ய பூதரே ।
ஹரப்ராணேச்வரீம் வந்தே
ஹந்த்ரீம் விபுத வித்விஷாம் ॥ 1 ॥

பிரும்மா, விஷ்ணு, ஈச்வரன் இவர்களால் துதிக்கத் தகுந்தவளும், விந்த்யமலையில் விளையாடுபவளும், தேவர்களின் விரோதிகளான அஸுரர்களைக் கொல்பவளுமான பரமசிவனின் ப்ராணநாயகியான பார்வதியை நமஸ்கரிக்கிறேன்.

(கருத்து) பிரும்மஸ்துதி தேவீமாஹாத்ம்யத்திலும், விஷ்ணு ஸ்துதி ஹரிவம்சத்திலும், ஈச்வர ஸ்துதி வராஹ புராணத்திலும் உள்ளன.

अभ्यर्थनेन सरसीरुहसंभवस्य
त्यक्त्वोदिता भगवदक्षिपिधानलीलाम् ।
विश्वेश्वरी विपदपागमने पुरस्ता-
न्माता ममास्तु मधुकैटभयोर्निहन्त्री ॥ २ ॥

அப்யர்த்தநேந ஸரஸீருஹ ஸம்பவஸ்ய
த்யக்த்வோதிதா பகவதக்ஷிபிதாநலீலாம் ।
விச்வேச்வரீ விபதபாகமநே புரஸ்தாத்
மாதா மமாஸ்து மதுகைடபயோர்
நிஹந்த்ரீ ‖ 2 ‖

தாமரையிலுதித்த பிரும்மாவின் வேண்டுகோளால் பகவானின் கண்களை மூடுவதென்ற விளையாட்டை விட்டுவிட்டுத் தோன்றியவளும், மதுகைடபர்கள் என்ற அசுரர்களைக் கொன்றவளாயும், உலகத்திற்கு நாயகியாயுமுள்ள தாய், என் ஆபத்துக்களை நீக்குவதற்காக எதிரில் தோன்றட்டும்.

(கருத்து) திருப்பாற்கடலில் யோக நித்ரையில் இருக்கும் திருமாலின் தொப்புள் மூலம் பிரும்மதேவன் உண்டானர். பிறகு இரு காதுகளினின்று மது, கைடபன், என்ற அசுரர்கள் உண்டாயினர்.

போர் புரிய ஒருவரும் இல்லாததால் அவர்கள் பிரும்மாவைத் தாக்கினர். வருந்திய பிரும்மதேவன் திருமாலைத் துதித்தார். நித்ரா ரூபிணியான அம்பாளின வசமாயிருந்ததால் எழுந்திருக்க வில்லை. உடன் அம்பாளைத் துதித்தார். மாயாரூபிணியான அம்பாள் விலகி நின்ருள். இரு அசுரர்களையும் திருமால் அழித்தார். அம்பாளின் தூண்டுகோலால் அழித்ததால் மதுகைடப ஹந்த்ரீ, என்று அம்பாளைக் கூறுகிறோம். இது தேவீ மாஹாத்ம்யத்தின் முதல் சரித்ரம்.

प्राङ्निर्जरेषु निहितैर्निजशक्तिलेशै-
रेकीभवद्भिरुदिताखिललोकगुप्त्यै ।

संपन्नशस्त्रनिकरा च तदायुधस्थै-
मीता ममास्तु महिषान्तकरी पुरस्तात् ॥ ३ ॥

ப்ராங்நிர்ஜரேஷு நிஹிதைர்நிஜ சக்திலேசை-
ரேகீபவத்பிருதிதாகில லோககுப்த்யை ।
ஸம்பந்நசஸ்த்ர நிகராச ததாயுதஸ்தைஃ
மாதா மமாஸ்து மஹிஷாந்தகரீ புரஸ்தாத் ॥ 3 ॥

முன்பு தேவர்களிடத்தில் வைக்கப்பட்ட தன் சக்தியின் லேசங்கள் ஒன்று சேர்ந்து உலகத்தைக் காப்பதற்காகத் தோன்றியவளும், அந்தந்த தேவர்களின் ஆயுதங்களிலிருந்து வெளிவந்த சக்தி லேசங்களாலுண்டான அநேக ஆயுதங்களுடன் கூடியவளுமான மஹிஷாஸுர மர்த்தினியான அம்பிகை என் எதிரில் தோன்றட்டும்.

(கருத்து) பராசக்தி பிரும்மாதி தேவர்களை உண்டாக்கி அவர்களுக்குத் தன்தன் கார்யங்களைச் செய்ய சக்தியையுமளிக்கிறாள்.

மஹிஷாசுரன் தவம் செய்து தனக்கு புருஷர்களால் நாசம் கூடாதென்ற வரனை யடைகிறான். அதற்கு விரோதமில்லாமல், தேவர்களின் உடலிலிருந்து அம்பாளின் சக்தி லேசங்கள் வெளிவந்து ஒரு ஸ்திரீ உருவத்தையுண்டு பண்ணுகின்றன. அவரவர் ஆயுதங்களையும் கொடுக்கின்றனர். இவளே மஹிஷாசுரனைக் கொன்றாள் ஆதலால் மஹிஷாசுரமர்தினீ என்ற பெயர் ஏற்பட்டது. இது தேவீமஹாத்மயத்தின் மத்யம சரிதம்.

प्रालेयशैलतनयातनुकान्तिसम्प-
त्कोशोदिता कुवलयच्छविचारुदेहा ।

नारायणी नमदभीप्सितकल्पवल्ली
सुप्रीतिमावहतु शुम्भनिशुम्भहन्त्री ॥ ४ ॥

ப்ராலேய சைலதநயா தநுகாந்திஸம்பத்
கோசோதிதா குவலயச்சவிசாருதேஹா ।
நாராயணீ நமதபீப்ஸிதகல்பவல்லீ
ஸுப்ரீதிமாவஹது சும்பநிசும்பஹந்த்ரீ ‖ 4 ‖

ஹிமவானின் புத்ரியான பார்வதியின் சரீர காந்தியின் மிகுதியாலுண்டானவளும், நீலோத்பலம் போன்ற காந்தியையுடைய சரீரமுள்ளவளும் நமஸ்கரிப்பவர்களின் இஷ்டத்தைக் கொடுப்பதற்கு கற்பகக்கொடியோலுள்ளவளும் சும்ப நிசும்பர்களைக் கொன்றவளுமான நாராயணீ மிக சந்தோஷத்தை யுண்டு பண்ணட்டும்.

(கருத்து) சும்பன், நிசும்பன் என்ற அசுரர்கள் கடுந்தவம் புரிந்து கன்னிகையைத் தவிர்த்து மற்ற எவராலும் கொல்லப்படக் கூடாதென்று வரனை யடைந்தனர். வரனின் பலத்தினுல் தேவர்களை துன்புறுத்தினர். இமையமலையை யடைந்து தேவர்கள் அம்பாளைத் துதிக்க அம்பாள் ஆவிர்ப்பவித்தாள்.

தேவர்களின் நிலமையைக் கண்டதும் மனம் இறங்கியது. உடன் அவள் சரீரத்திலிருந்து கருநெய்தல் மலர்போன்ற காந்தியுடன் ஒரு பெண் வெளி வந்தாள். முன் சரீரம் கருத்ததாக இருந்ததால் காளி என்ற பெயருடன் சும்பன், நிசும்பன், சண்டன், முண்டன், ரக்தபீஜன் முதலிய அசுரர்களைக் கொன்ருள். சரீர கோசத்திலிருந்து வந்ததால் அவளுக்கு கௌசிகீ என்று பெயர்

ஏற்பட்டது. இவ்விதம் தேவீ பாகவதத்தில் உள்ளது. இது மூன்றுவதான உத்தம சரித்ரம்.

विश्वेश्वरीति महिषान्तकरीति यस्याः
नारायणीत्यपिच नामभिरङ्कितानि ।
सूक्तानि पङ्कजभुवाच सुरर्षिभिश्च
दृष्टानि पावकमुखैश्च शिवां भजे ताम् ॥ ५ ॥

விச்வேச்வரீதி மஹிஷாந்தகரீதி யஸ்யாஃ
நாராயணீத்யபிச நாமபிரங்கிதாநி ।
ஸூக்தாநி பங்கஜபுவாச ஸுரர்ஷிபிஸ்ச்ச
த்ருஷ்டாநி பாவகமுகைஸ்ச்ச சிவாம்
பஜே தாம் ‖ 5 ‖

விச்வேச்வரீ, மஹிஷாந்தகரீ, நாராயணீ என்ற நாமங்களடங்கிய ஸூக்தங்கள் பிரும்மதேவன் மற்ற தேவர்கள், ரிஷிகள், அக்னி முதலியவர்கள், இவர்களால் கண்டு பிடிக்கப்பட்டன. இவ்விதம் துதிக்கப்பெற்ற தேவியை ஸேவிக்கின்றேன்.

(கருத்து) தேவீ மாஹாத்மயத்தில் முதல் அத்யாயத்தில், விச்வேச்வரீம் என்று ஆரம்பித்து பிரும்மாவும், மஹிஷாசுரவதமான பிறகு "தேவ்யா யயாதத மிதம்" என்று தேவர்களும் ரிஷிகளும் சும்ப நிசும்ப வதத்திற்குப் பிறகு "தேவ்யா ஹதே தத்ர மஹா ஸுரேந்த்ரே" என்று அக்னி முதலியவர்களும் துதிக்கின்றனர். ஸூக்தங்கள் என்பது வேதமந்திரங்களைச் சொல்வது. இங்கு வேதங்களை அறிந்து அவ்விதமே துதிப்பதால் அப்பெயர் பொருந்தும்.

उत्पत्तिदैत्यहननस्तवनात्मकानि
संरक्षकाण्यखिलभूतहिताय यस्याः ।
सूक्तान्यशेषनिगमान्तविदः पठन्ति
तां विश्वमातरमजस्रमभिष्टवीमि ॥ ६ ॥

*உத்பத்திதைத்யஹநநஸ்தவநாத்மகாநி*
*ஸம்ரக்ஷகாண்யகிலபூதஹிதாய யஸ்யா: ।*
*ஸூக்தாந்யசேஷநிகமாந்தவித: படந்தி*
*தாம் விச்வமாதரமஜஸ்ரமபிஷ்டவீமி ॥ 6 ॥*

வேதத்தின் முடிவான உபநிஷத்துக்களை யறிந்த பெரியோர்கள் எந்த தேவியின் ஆவிர்ப்பாவம் அஸுர ஸம்ஹாரம் ஸ்தோத்ரமென்ற தேவியின் மஹிமையை எல்லோரையும் ஆபத்திலிருந்து காக்கக் கூடியதென்று பிராணிகளின் க்ஷேமத்திற்காக பாராயணம் செய்கிறார்களோ. அந்த உலக மாதாவான தேவியை எப்பொழுதும் துதிக்கின்றேன்,

(கருத்து) தேவி மாஹாத்மியம் அம்பாளின் ஆவிர்ப்பாவத்தையும், அசுர ஸம்ஹாரத்தையும் துதியையும் கூறுகிறது. இதை பாராயணம் செய்பவர் துன்பத்தை யடைய மாட்டார், நன்மையை யடைவர்.

ये वैप्रचित्तपुनरुत्थितशुम्भमुख्यै-
र्दुर्भिक्षघोरसमयेन च कारितासु ।
आविष्कृतास्त्रिजगदार्तिषु रूपभेदा-
स्तैरम्बिका समभिरक्षतु मां विपद्भ्यः ॥ ७ ॥

யே வைப்ரசித்தபுநருத்தித சும்பமுக்யைஃ
துர்ப்பிக்ஷகோரஸமயேநச காரிதாஸு ।
ஆவிஷ்க்ருதாஸ்த்ரிஜகதார்த்திஷு ரூபபேதா-
ஸ்தைரம்பிகா ஸமபிரக்ஷது மாம்
விபத்ப்யஃ ॥7॥

விப்ரசித்தியின் குமாரர்கள், மறுபடியும் உண்டான சும்பன் முதலியவர்கள், இவர்களால் மூவுலகிற்கும் துர்பிக்ஷம், பலவித பயம் இவைகள் ஏற்படும்பொழுது எந்த தேவியானவள் ரக்ததந்திகை முதலிய அவதாரங்களையடைந்து காப்பாற்றினாளோ அந்த ரூபங்களால் என்னை ஆபத்துக்களிலிருந்து காப்பாற்றட்டும்.

(கருத்து) தேவீமாஹாத்ம்யம் பதினோராவது அத்யாயத்தில் நாராயணீ ஸ்த்தோத்ரத்தினால் துதிக்கப்பெற்ற தேவீ அசுரவதத்திற்காக பல உருவங்களை அடைகிறாள் என்பது இங்கு கூறப்படுகிறது.

सूक्तं यदीयमरविन्दभवादिदृष्ट-
मावर्त्य देव्यनुपदं सुरथस्समाधिः ।
द्वावप्यवापतुरभीष्टमनन्यलभ्यं
तामादिदेवतरुणीं प्रणमामि देवीम् ॥ ८ ॥

ஸூக்தம் யதீயமரவிந்தபவாதி த்ருஷ்ட
மாவர்த்ய தேவ்யநுபதம் ஸுரதஸ்ஸமாதிஃ।
த்வாவப்யவாபதுரபீஷ்டமநந்ய லப்யம்
தாமாதிதேவதருணீம் ப்ரணமாமி தேவீம் ॥8॥

ஸுரதன், ஸமாதி என்ற அரசனும் வைச்யனும் பிரும்மா முதலிய தேவர்களால் காணப்பட்ட எந்த

தேவியின் ஸ்தோத்ரத்தை ஆவர்த்தி செய்து பிறரால் அடையமுடியாத விருப்பத்தை நிறைவேற்றிக் கொண் டார்களோ அந்த பரமசிவனின் நாயகியான தேவியை நன்கு நமஸ்கரிக்கின்றேன்.

(கருத்து) இங்கு தேவியின் அருளால் வேறுவிதமாய் அடைய முடியாத சுகத்தை யனுபவிக்கலாம் என்று கூறுகிறது.

பாஞ்சராத்ரம் லக்ஷ்மீ தந்திரத்தில் அம்பாள் தேவேந்திரனிடம் கூறுகிருள். ஸ்வாயம்புவ மன்வந்த ரத்தில் மஹிஷாஸுர மர்தினியாகவும், மதுகைடபர்கள் பிரும்மதேவனைத் துன்புறுத்தும்பொழுது துர்கையாக வும், தாமஸ மன்வந்திரத்தில் கௌரீ சரீரத்திலிருந்து கௌசிகியாகவும், மறுபடி ஒரு சமயம் ரக்ததந்திகையாக வும், நாற்பதாவது சதுர்யுகத்தில் நூறு வருஷங்கள் மழையின்றி உலகம் வருந்தும்பொழுது நூற்றுக்கணக் கான கண்களுடன் உண்டாகுவதால் சதாக்ஷீ என்றும் சாகங்களுடன் உண்டாகுவதால் சாகம்பரீ என்றும், துர்கமன் என்ற அசுரனைக் கொல்வதால் துர்கை என்றும், ஐம்பதாவது சதுர்யுகத்தில் பீமாதேவியாயும், அறுப தாவது சதுர்யுகத்தில் அருணன் என்ற அசுரனைக்கொல் வதற்கு ப்ராமரீயாயும், இவ்விதம் உலகிற்கு பயம் ஏற் படும்பொழுது அதை நீக்குவதற்கு பல அவதாரத்தை யடைகிறேன் என்று கூறுகிருள். கீழ் கூறப்பெற்ற எல்லா வித அவதாரங்களுக்கும் காரணமாயுள்ளவள். மஹா லக்ஷ்மீ (மூலப்ரக்ருதி) இவளுடைய மஹிமையைக் கூறு வது தேவீமாஹாத்மயம். இதை வஸிஷ்டர், ஸுரதன், ஸமாதி என்ற அரசனுக்கும், வைச்யனுக்கும், உபதேசித்

தார். அவர்களும் அதை ஜபித்து இஷ்டஸித்தியை யடைந்தார்கள். முறையுடன் ஜபிப்பவர் விரும்பியதை யடைவார்.

माहिष्मतीतनुभवं च रुरुं च हन्तु-
मविष्कृतैर्निजरसादवतारभेदैः ।
अष्टादशाहतनवाहतकोटिसंख्यै-
रम्बा सदा समभिरक्षतु मां विपद्भ्यः ॥ ९ ॥

மாஹிஷ்மதீ தநுப்வம்ச ருரும் ச ஹந்து-
மாவிஷ்க்ருதைர் நிஜரஸாதவதாரபேதைః ।
அஷ்டாதசாஹத நவாஹதகோடி ஸங்க்யை-
ரம்பா ஸதா ஸமபிரக்ஷது மாம் விபத்ப்யః ॥9॥

மாஹிஷ்மதியின் குமாரனை மஹிஷாஸுரனையும் ருரு என்ற அஸுரனையும் கொல்வதற்காக தன் சக்தியால் 18 கோடி கன்னிகைகளுடனும் 9 கோடி கன்னிகைகளுடனும் ஆவிர்பவித்த அம்பிகை ஆபத்துக்களிலிருந்து என்னைக் காப்பாற்றட்டும்.

(கருத்து) ஒரு சமயம் மஹா கைலாசத்தில் பரம சிவன் அமர்ந்திருக்கும்பொழுது பிரும்மா, விஷ்ணு இருவரும் வந்து அசுர ஹிம்ஸையைத் தெரிவித்தனர். அங்கு அவர்கள் ஒருவர்க்கொருவர் பார்வையிலிருந்து ஒரு கன்னிகை உண்டாகி ஸத்வம் முதலிய குணங்களால் மூன்று உருவமாய்த் தோன்றினாள். ஸத்வரூபம் ஸ்ருஷ்டி சக்தி, பிரும்மதேவனிடம் சென்றாள்.

ராஜஸசக்தி வைஷ்ணவீ, அவள் தனக்குச்சமமான 18 கோடி கன்னிகைகளை ஸ்ருஷ்டித்து மந்தரமலையில் விஹாரம் செய்தாள்.

இந்த சமயம் விப்ரசித்தி என்ற அசுரகுமாரி மாஹிஷ்மதீ எருமை உருவம் கொண்டு, தவம்செய்கின்ற ஸிந்துத்வீபனை பயமுறுத்தினுள். நீ எருமையாகக்கடவது என்று சபித்தான். அப்பொழுது வித்யுமதீ என்ற அசுர கன்னிகை அங்கு வந்தாள். அவளைப் பார்த்த சிந்துத்வீபன் தேஜஸ் நழுவியது. அதை மாஹிஷ்மதீ உட்கொண்டாள். அதில் உண்டானவன் மஹிஷாஸுரன். அவன் வைஷ்ணவியிடம் போர் புரியும்பொழுது 18 கோடி கன்னிகைகளுடன் அவனைக்கொன்றுள்.

தாமஸசக்தி ரௌத்ரீ நீலமலையில் வாஸம் செய்தாள். ருரு என்ற அசுரன் கடலின் நடுவில் பட்டிணம் நிர்மாணித்து அதில் வசித்து வந்தான்.

ஒரு சமயம் தேவர்கள் ருருவின் ஹிம்ஸை பொருக்காமல் அம்பாளிடம் தெரிவித்தனர். அவள் மந்தஹாஸம் செய்தாள். அதிலிருந்து 9 கோடி கன்னிகைகள், அனேக ஆயுதங்களைத் தாங்கியவர்களாகத் தோன்றினர். அவர்களுடன் ருருவை ஸைன்யத்துடன் கொன்றுள் அம்பிகை என்ற கதை சுருக்கமாய் கூறப்படுகிறது. இது வராஹ புராணத்தில் உள்ளது.

एतच्चरित्रमखिलं लिखितं हि यस्या-
स्संपूजितं सदन एव निवेशितं वा ।
दुर्गं च तारयति दुस्तरमप्यशेषं
श्रेयः प्रयच्छति च सर्वमुमां भजे ताम् ॥ १० ॥

ஏதச்சரித்ரமகிலம் லிகிதம் ஹி யஸ்யாஸ்
ஸம்பூஜிதம் ஸதந ஏவ நிவேசிதம் வா ।

துர்கம்ச தாரயதி துஸ்தரமப்யசேஷம்
ச்ரேயஃ ப்ரயச்சதிச ஸர்வமுமாம்
பஜே தாம் ‖ 10 ‖

எந்த பராசக்தியின் சரித்திரத்தை முழுவதும் எழுதிப் பூஜித்தாலும், அல்லது வீட்டில் வைத்திருந்தாலும் கடக்கமுடியாத ஆபத்துக்களையும் கடக்கிறுனே, எல்லாவித மேன்மையையும் அடைகிறுனே, அந்த உமா தேவியை ஸேவிக்கிறேன்.

(கருத்து) ஸத்வம் ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களால் ஆவிர்பவிக்கும் தேவியின் சரித்ரம் தேவீ மஹாத்மியம். இது மூன்று சரித்திரங்களடங்கியது. நவமியன்று நியமத்துடன் கேட்பவர் ராஜ்யலாபத்தை யடைவார். இதை எழுதி பூஜிப்பவர் மூன்று உலகத்திலும் ஜயத்தை யடைவார். தன-தான்ய-பசு-ஸ்திரீ ரத்ன லாபமடைவார். எந்த வீட்டில் க்ரந்தம் உள்ளதோ அங்கு ஸர்ப்பம்-திருட்டு-முதலிய பயம் ஏற்படாது. இவ்விதம் வாராஹ புராணத்தில் உள்ளது.

यत्पूजनस्तुतिनमस्कृतिभिर्भवन्ति
प्रीताः पितामह रमेश हरास्त्रयोऽपि ।
तेषामपि स्वकगुणैर्ददतीं वपूंषि
तामीश्वरस्य तरुणीं शरणं प्रपद्ये ॥ ११ ॥

யத்பூஜநஸ்துதி நமஸ்க்ருதிபிர்பவந்தி
ப்ரீதாஃ பிதாமஹ ரமேசஹராஸ்த்ரயோபி।
தேஷாமபி ஸ்வககுணைர்தததீம் வபூம்ஷி
தாமீச்வரஸ்ய தருணீம் சரணம் ப்ரபத்யே ‖ 11 ‖

எந்த தேவியின் பூஜை, ஸ்துதி, நமஸ்காரம் இவைகளால் பிரஹ்ம, விஷ்ணு, மஹேச்வரர்கள் ப்ரீதியடைகிறார்களோ, அந்த ப்ரஹ்மாதி தேவர்களுக்கும் தனது ஸத்வம் முதலிய குணங்களால் சரீரத்தைக் கொடுக்கின்ற அம்பிகையை சரணமடைகிறேன்.

(கருத்து) பிர்மாதி தேவர்கள் ஸத்வம், ரஜஸ் தமஸ் என்ற மூன்று குணங்களால் உண்டாகின்றனர். முக்குணங்களும் தேவியிடம் அடங்கியுள்ளது. ஆதலால் தேவியை வழிபடுவது தேவர்களின் மகிழ்ச்சிக்குக் காரணமாகிறது.

வராஹபுராணத்தில் கூறியது, பிர்மதேவன் கங்கையில் மூழ்கி தவம் செய்கிறார். காப்பாற்று காப்பாற்று என்ற சப்தம் கேழ்க்கப்பட்டது. அது வேத்ராசுரனால் துன்புறுத்தப்பெற்ற தேவர்களுடையது, உடன் பிரும்மா அம்பாளை நினைக்கிறார். எட்டு புஜத்துடன் வெளிவந்து அசுரனைக் கொல்கிறாள் தேவீ. உடன் சிவன் துதித்து அம்பாளை துதிப்பவர் அபீஷ்டத்தை யடைகிறார் என்று கூறுகிறார். நவமியன்று ஸத்துமாவை ஆஹாரம் செய்து அம்பாளை வழிபடுவது நன்மையை யளிக்கும். மேலும் ஹரிவம்சத்தில் கூறியது. மஹாவிஷ்ணு தேவியைத் துதிக்கின்றார். அனிருத்தன், அம்பாளை துதித்து, பிரும்மா, விஷ்ணு, இந்திரன், சூர்யன், சந்திரன், நவக்ரஹங்கள், நதிகள், சமுத்ரங்கள் ஸித்தர்கள் மற்றுமுள்ள தேவர்கள் அம்பாளின் நாமோச்சாரணத்தினால் திருப்தியடைகின்றனர் என்று கூறுகிறான். இவை எல்லாம் இங்கு கூறப்படுகிறது.

कान्तारमध्यदृढलग्नतयाऽवसन्ना
मग्नाश्च वारिधिजले रिपुभिश्च रुद्धाः ।
यस्याः प्रपद्य चरणौ विपदस्तरन्ति
सा मे सदाऽस्तु हृदि सर्वजगत्सवित्री ॥ १२ ॥

காந்தாரமத்ய த்ருடல(க்) நதயாவஸந்நா
மக்நாஸ்ச்ச வாரிதிஜலே ரிபுபிஸ்ச்ச ருத்தாஃ ।
யஸ்யாஃ ப்ரபத்ய சரணௌ விபதஸ்தரந்தி
ஸா மே ஸதாஸ்து ஹ்ருதி ஸர்வ ஜகத்ஸவித்ரீ ॥12॥

காட்டின் நடுவில் அகப்பட்டுக் கொண்டு வழி தெரியாமல் தபிக்கின்றவர்களும், ஸமுத்ர ஜலத்தில் மூழ்கி வெளிவர முடியாமல் திணருபவர்களும், எதிரிகளால் ஆக்ரமிக்கப்பட்டவர்களும், எந்த அம்பிகையின் பாதங்களைச் சரணமடைந்து அந்த ஆபத்துக்களிலிருந்து விடுபடுகிறார்களோ, அந்த உலகத்தைப் படைக்கும் தேவி எப்பொழுதும் என் மனதில் இருக்கவேண்டும்.

(கருத்து) ஹரிவம்சத்தில் பகவான் கிருஷ்ணன் தேவியிடம் உன்னை சரணமடைபவர் கீழ்க்கண்ட ஆபத்துக்களிலிருந்து நீங்கவேண்டும் என்று கூறுகிறார். அது இங்கு காண்பிக்கப்படுகிறது.

बन्धे वधे महति मृत्युभये प्रसक्ते
वित्तक्षये च विविधे च महोपतापे ।
यत्पादपूजनमिह प्रतिकारमाहु-
स्सा मे समस्तजननी शरणं भवानी ॥ १३ ॥

பந்தே வதே மஹதி ம்ருத்யுபயே ப்ரஸக்தே
வித்தக்ஷயேச விவிதேச மஹோபதாபே ।
யத்பாதபூஜநமிஹ ப்ரதிகாரமாஹு:
ஸாமே ஸமஸ்தஜநநீ சரணம் பவாநீ ॥ 13 ॥

காராக்ருஹ பந்தம், வதம், மரண பயம், தனநாசம். பலவிதமான இராஜபயம். சோர, ஸர்ப்ப, வ்யாக்ரபயம் முதலியதுகளில் தேவியைப் பூஜிப்பது பயத்தை நீக்கும் என்று எந்த தேவியைப் பற்றி மகான்கள் கூறுகிறார்களோ, அந்த உலக மாதாவான பார்வதி எனக்கு சரணம் (அடைக்கலம்)

(கருத்து) ஹரிவம்சத்திலுள்ள பகவானின் வாக்யங்களாலும், வராஹ புராணத்தில் பிரும்மாதிகளின் ஸ்தோத்திரத்திலும் ஸமஸ்த பயமும் தேவியின் அருளால் நீங்குகிறதென்று தெரிகிறது.

बाणासुरप्रहितपन्नगबन्धमोक्ष-
स्तद्बाहुदर्पदळनादुषया च योगः ।
प्राद्युम्निना द्रुतमलभ्यत यत्प्रसादा-
त्सा मे शिवा सकलमप्यशुभं क्षिणोतु ॥ १४ ॥

பாணாஸுரப்ரஹிதபந்நகபந்தமோக்ஷஸ்
தத்பாஹுதர்பதளநாதுஷயா ச யோக: ।
ப்ராத்யும்நிநா த்ருதமலப்யத யத்ப்ஸாதாத்
ஸா மே சிவா ஸகலமப்யசுபம் க்ஷிணோது ॥

ப்ரத்யும்னனின் குமாரனுன அனிருத்தன் பாணாஸுரன் ப்ரயோகம் செய்து விடப்பட்ட நாகாஸ்த்ர

பந்தத்திலிருந்து விடுதலேயும் அவனுடைய கைக் கொழுப்பை நாசம் செய்ததால் உஷையின் ஸம்பந்தத் தையும் எந்த தேவியின் பிரஸாதத்திஞல் அடைந் தாஞே, அந்த மங்கள ரூபியான பரதேவதை ஸமஸ்த அமங்களங்களேயும் போக்க வேண்டும்.

(கருத்து) பாணுசுரன் ஒரு சமயம் அநிருத்தனே நாகாஸ்திரத்திஞல் கட்டுகிருன். அந்த அஸ்திரத்தை ஸ்ரீ கிருஷ்ணனே அவிழ்க்கவேண்டுமென்று தேவமரி யாதை. அதை மீருமல் அநிருத்தனின் பிரார்த்தனேக் கிணங்கி தேவீ தளர்த்திவிட்டு ஸமாதானம் செய்கிருள். பிறகு அவள் தூண்டுதலால் கிருஷ்ணன் வந்து நாகாஸ் திரத்தை அவிழ்த்துவிட்டு பாணுசுரனேயும் ஸம்ஹரிக் கிருன். பிறகு அநிருத்தன் உஷையோடு சுகமாக வாழு கிருன் என்ற ஹரிவம்ச சரிதம் இங்கு கூறப்பெற்றது.

पापः पुलस्त्यतनयः पुनरुत्थितो मा-
मद्यापि हर्तुमयमागत इत्युदीतम् ।
यत्सेवनेन भयमिन्दिरयाऽवधूतं
तामादिदेवतरुणीं शरणं गतोऽस्मि ॥ १५ ॥

பாபஃ புலஸ்த்யதநயஃ புநருத்திதோ மா
மத்யாபி ஹர்துமயமாகத இத்யுதீதம் ।
யத்ஸேவனேன பயமிந்திரயாவதூதம்
தாமாதிதேவதருணீம் சரணம் கதோஸ்மி ॥

லக்ஷ்மிதேவியின் அவதாரமாகிய ருக்மிணீ விவாஹ சமயத்தில் தன்னே மணப்பதற்காக சிசுபாலன் வந்த தைக் கேட்டு புலஸ்த்ய புத்ரஞன ராவணன்தான் மறு

படியும் என்னை அபஹரிக்க வந்து விட்டான் என்று பயந்தாள். அந்த பயத்தை எந்த தேவியை ஸேவித்துப் போக்கிக்கொண்டாளோ அந்தப் பரமசிவனின் பத்தினி யான பரதேவதையை சரணமடைகிறேன்.

(கருத்து) ருக்மிணீதேவி தனது கல்யாணத்தன்று காலை அம்பாளை வழிபடுகிருள். அப்பொழுது முன் யுகத்தில் என்னை துன்புறுத்திய இராவணன் சிசுபாலனுக வந்து என்னை இந்த யுகத்திலும் அபஹரிக்க முயலுகிருன். ஏ பார்வதி நீதான் அந்த பயத்தைப் போக்கி ஸ்ரீ கிருஷ்ணன் என்னை மணக்கும்படி செய்யவேண்டும் என்று வேண்டுகிருள். உடன் அங்கிருந்து வரும்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் ருக்மிணியை அழைத்துச் செல்கிருர். இவ்விதம் அம்பாளை சேவிப்பது மிகுந்த பயத்தையும் நீக்கும் என்பது விளங்குகிறது. இது பாகவதத்தில் உள்ள சரித்ரம்.

यद्ध्यानजं सुखमवाप्यमनन्तपुण्यै-
स्साक्षात्तमच्युतपरिग्रहमाश्ववापुः ।
गोपाङ्गनाः किल यदर्चनपुण्यमात्रा-
त्सा मे सदा भगवती भवतु प्रसन्ना ॥ १६ ॥

யத்யாநஜம் ஸுகமவாப்யமநந்தபுண்யைஃ
ஸாக்ஷாத்தமச்யுதபரிக்ரஹமாச்வவாபுஃ ।
கோபாங்கநாஃ கில யதர்ச்சநபுண்யமாத்ராத்
ஸா மே ஸதா பகவதீ பவது ப்ரஸந்நா ॥16॥

பகவானை த்யானம் செய்தால் பகவானின் தோற்றம் மனதில் ஏற்படும். அப்பொழுது அளவற்ற சந்

தோஷமுண்டாகும். இது அனேக ஜன்மாவின் புண்யங்களிருந்தால்தான் உண்டாகும். கோப ஸ்திரீகளோ அந்த பகவானை நேரில் கண்டு ஆலிங்கனாதிகளால் பேரானந்தத்தை யடைந்தார்கள். இவ்விதமடைவதற்கு மார்கழி மாதம் காத்யாயனியை அர்ச்சனை செய்தது தான் காரணமாகும். ஆதலால் அம்பிகையை அர்ச்சனை செய்வது பகவானை நேரில் பார்க்கக் காரணமாகிறது. அப்பேர்ப்பட்ட பரதேவதை எப்பொழுதும் அருள்புரிய வேண்டும்.

(கருத்து) கோபிகள் கண்ணனைக் கணவனாக அடைவதற்கு மார்கழி மாதம் காலையில் யமுனையில் நீராடி மணலில் அம்பாளைப் பூஜிக்கிறார்கள். ஒருமாத வ்ரதம் பூர்த்தியானவுடன் ஸ்ரீ கிருஷ்ணன் நேரில் வந்து அவர்களின் இஷ்டத்தை நிறைவேற்றுகிறார். அனேக வருஷங்கள் ஆஹார மில்லாமல் தவம் செய்யும் மஹரிஷிகள் மனக்கண்ணால் கொஞ்சநேரம் பார்க்கின்றனர். அம்பாளை ஒரு மாதம் பூஜித்தவர்கள் நேரிலேயே பார்க்கின்றனர். ஆதலால் அம்பாளின் அருளைப்பெற்றவர் அரியபயனை யடைகிறார் என்று ஸ்ரீ பாகவத சரித்ரம் இங்கு கூறப்பெற்றது.

रात्रिं प्रपद्य इति मन्त्रविदः प्रपन्ना-
नुद्बोध्य मृत्यवधिमन्यफलैः प्रलोभ्य ।
बुध्वाच तद्विमुखतां प्रतनं नयन्ती-
माकाशमादिजननीं जगतां भजे ताम् ॥ १७ ॥

ராத்ரிம் ப்ரபத்ய இதி மந்த்ரவிதः ப்ரபந்நா
நுத்போத்ய ம்ருத்யவதிமந்யபலைः
ப்ரலோப்ய ।

புத்வாச தத்விமுகதாம் ப்ரதநம் நயந்தீ-
மாகாசமாதிஜநநீம் ஜகதாம் பஜே தாம் ॥

'ராத்ரிம் ப்ரபத்யே' என்ற மந்திரத்தை யறிந்து சரணமடைந்தவர்களை தூக்கத்திலிருந்து எழுப்பி பேரானந்தமான மோக்ஷத்தைத் தவிர மற்ற பயன்களைக் கொடுத்து ஏமாற்றும் பொழுது, அவர்கள் அதற்கு மயங்காமல் மோக்ஷத்தையே விரும்புகின்றனரென அறிந்து மோக்ஷத்தை யடைவிக்கின்ற, உலகத்திற்கு ஆதிமாதாவான அம்பிகையை பஜனம் செய்கின்றேன்.

(கருத்து) ஸாமவேதத்தில் ஸாமவிதானம் என்று ஒரு பிராமண பாகம். அதில் ராத்ரி உபாஸனம் என்று ஒரு அம்பாள் வழிபாடு ராத்ரி ஸூக்தம் என்ற மந்திரத்தைச் சொல்லி செய்யவேண்டுமெனக் கூறியுள்ளது. இது இரவில் படுக்கும்பொழுது செய்யக்கூடியது. ச்ரத்தையுடன் செய்தால் ஒருநாள் ஸ்வப்னத்தில் அம்பாள் தோன்றி உபாஸகனிடம் நீ இந்த வருஷம், மாதம், திதி, ஸமயம், மரிக்கப்போகிறாய். பிரும்மலோகம் செல்கிறாயா? ஸ்வர்கம் மேலும் சுகவாழ்வான பிறப்பை யடைகிறாயா? என்று கேட்கிறாள். அவன் இதற்கு மயங்காமல் மறுபிறப்பின்றி மோக்ஷத்தையே கொடு என்று தைர்யமாய்க் கேட்கவேண்டும். உடன் அதையும் கொடுக்கிறாள். இதற்கு ராத்ரி வ்ரதம் என்று பெயர்.

சுகத்திற்கு கடைசீ எல்லை மோக்ஷாநந்தம். அது மிக க்லேசத்தினால்தான் அடையக்கூடியது. அம்பாளின் அருள் இருந்தால் அதுவும் கிடைக்கின்றதென்பது இங்கு கவனிக்கத்தக்கது.

देशकालेषु दुष्टेषु दुर्गाचन्द्रकलास्तुतिः ।
सन्ध्ययोरनुसन्धेया सर्वापद्विनिवृत्तये ॥ १८ ॥

தேசகாலேஷு துஷ்டேஷு துர்காசந்த்ர
கலாஸ்துதிஃ ।
ஸந்த்யயோரநுஸந்தேயா ஸர்வாபத்வி
நிவ்ருத்தயே ॥

தேச காலங்கள் கெட்டிருக்கும்பொழுது துர்கையின் சந்திர கலாஸ்துதி என்ற இந்த ஸ்தோத்ரம் காலை மாலை இரு வேளைகளிலும் ஆபத்துக்கள் நீங்குவதற்காக அவசியம் ஜபம் செய்யப்படவேண்டும்.

சரீரத்தில் ஏற்படும் வியாதியும் மனதிலுண்டாகும் கவலையும் விரைவில் நிவர்த்தி யடையும்.

(கருத்து) வால்நக்ஷத்திரம் முதலிய கெட்ட அறி குறிகள் மற்றும் ஜலம், தீ, காற்று இவைகளாலும் தேசத்திற்கு துன்பம் ஏற்படாமலிருக்க இதை இரு வேளைகளிலும் பாராயணம் செய்ய வேண்டும். அவரவர் விரும்பிய பயனை யடைவார்.

श्री मात्रे नमः

## ॥ श्री अपीतकुचाम्बा स्तवः ॥

ஸ்ரீமான் அப்பய்ய தீக்ஷிதரவர்கள் அருளிய

# அபீதகுசாம்பாள் ஸ்தவம்

आनन्दसिन्धुलहरी ममृतांशुमौलेः
आसेविनाममृत निर्मित वर्तिमक्ष्णोः ।
आनन्दवल्लि वितते रमृतार्द्रगुच्छम्
अम्ब स्मराम्यहमपीत कुचे वपुस्ते ॥ १ ॥

ஆனந்த ஸிந்துலஹரீம் அம்ருதாம்ஶு மௌளேஃ
ஆஸேவினும் அமிருத நிர்மித வர்த்தி மக்ஷ்ணோஃ ।
ஆனந்த வல்லி விததேஃ அம்ருதார்த்ரகுச்சம்
அம்ப ஸ்மராம்யஹம்-அபீத குசே வபுஸ்தே ॥ 1 ॥

(பொருள்) உண்ணு முலையாளாக விளங்கும் ஏ அன்னையே! சந்திரமௌளீச்வரனுக்கு ஆனந்தமாகிய ஆற்றின் வெள்ளம்போல் விளங்குவதும், சேவிப்பவர் களுடைய கண்களுக்கு அமுதமயமான வர்த்தியாய்த் தோன்றுவதும், களிப்பாகிய கற்பகக்கொடியின் அமுதம் ததும்பும் பூங்கொத்தாயும் விளங்கும் உனது திரு மேனியை நான் நினைக்கிறேன்.

निर्निद्र कोकनद कोमलकान्तमम्ब
नित्यं सुधानिकरवर्षि पदं त्वदीयम् ।
मूर्छाकरज्वररुजा मम तापितस्ज
मूर्ध्नि क्षणं सकृदपीतकुचे निधेहि ॥ २ ॥

நிர்நித்ர கோகநத கோமல காந்தமம்ப
நித்யம் ஸுதாநிகரவர்ஷி பதம் த்வதீயம் ।
மூர்ச்சாகர ஜ்வரருஜா மம தாபிதஸ்ய
மூர்த்னி க்ஷணம் ஸக்ருதபீதகுசே நிதேஹி ‖ 2 ‖

(பொருள்) ஏ உண்ணுமுலையாளே! அன்னையே! மூர்ச்சையைக் கொடுக்கும் கடுமையான ஜ்வரத்தின் மிகுதியால் தாபமடைந்த எனது தலையின்மீது மலர்ந்த செந்தாமரையின் மென்மையும் அழகும் அமைந்ததும் எப்பொழுதும் அமுதவெள்ளத்தைப் பெருக்குவதுமான உனது திருவடியை ஒருதரம் கணப்பொழுதாவது வைக்கவேண்டும்

शीतांशुकोटि सुषमाशिशिरैः कटाक्षैः
अव्याजभूत करुणारस पूर पूर्णैः ।
कर्पूर धूलिमिव दिक्षु समाकिरद्भिः
अम्ब क्षणं स्नपय मामरुणाद्रिमान्ये ॥ ३ ॥

சீதாம்சுகோடி ஸுஷுமா சிசிரைஃ கடாக்ஷைஃ
அவ்யாஜபூத கருணாரஸ பூர பூர்ணைஃ ।
கர்ப்பூர தூலிமிவ திக்ஷு ஸமாகிரத்பிஃ
அம்ப க்ஷணம் ஸ்னபய மாம் அருணாத்ரிமான்யே ‖

(பொருள்) ஏ அன்னையே! அருணகிரிநாதனால் போற்றப்பட்டவளே! கோடிக்கணக்கான சந்திரகாந்தி போல் குளிர்ச்சியாயும், இயற்கையில் அமைந்த கருணையின் வெள்ளம் நிரைந்ததும் கர்ப்பூரப்பொடியை திசைகளில் இறைப்பதுபோன்றதுமான உனது கடைக்கண் பார்வைகளால் கணப்பொழுது என்னை நனையும்படி செய்யவேண்டும்.

आविर्भव क्षणमपीत कुचे पुरस्तात्
अम्ब ज्वरेण महता मम तापितस्य ।
येन त्वदङ्घ्रिरुचिजाल सुधाप्रवाहे
मग्नस्तदैव तनुताप ममुं त्यजेयम् ॥ ४ ॥

ஆவிர்ப்பவ க்ஷணமபீதகுசே புரஸ்தாத்
அம்ப ஜ்வரேண மஹதா மம தாபிதஸ்ய ।
யேன த்வதங்க்ரி ருசி ஜால ஸுதா ப்ரவாஹே
மக்னஸ்ததைவ தனுதாபம்-அமும் த்யஜேயம் ‖ 4 ‖

(பொருள்) உண்ணுமுலையாளே! ஏ அன்னையே! ஜ்வரத்தின் மிகுதியால் கொதிப்படைந்த எனது முன்னிலையில் கொஞ்சநேரம் தோன்றுவாயாக. அவ்விதம் தோன்றுவதால் உனது பாதத்தின் காந்திகளாகிய அமுத வெள்ளத்தில் மூழ்கியவனாக உடனே இந்த உடலின் கொதிப்பை நீக்கிக்கொள்வேன்.

नानाविधैर्नलिनजातलिपि प्रक्लृप्तैः
आनीतमूर्छमधिकं क्षुभितैर्ज्वराद्यैः ।
आश्वासय क्षणमपीत कुचे कराग्र
क्रीडाकनत्कनक हल्लक सौरभेण ॥ ५ ॥

நாநாவிதைঃ நலின ஜாதலிபி ப்ரக்லுப்தைঃ
ஆனீதமூர்ச்ச மதிகம் க்ஷுபிதைঃ ஜ்வராத்யைঃ ।
ஆச்வாஸய க்ஷணமபீதகுசே கராக்ர
க்ரீடாகனத் கனக ஹல்லக ஸௌரபேண ॥ 5 ॥

(பொருள்) ஏ உண்ணுமுலையாளே! பிரும்மதேவன் எழுதிய விதிவசமாக பலவிதமாய்க் கலக்கத்தை கொடுக்

கும், ஜ்வரம் முதலிய உபாதிகளால் கடுமையான மூர்ச்சையை யடைந்த என்னை, கையின் நுனியில் விளை யாட்டிற்கு வைத்திருக்கும் அழகிய பொற்றாமரை மல ரின் நறுமணத்தால் க்ஷணநேரம் களைப்பாறச் செய்ய வேண்டும்.

कण्ठे विषं विषमुचो भुजगाः कपर्दे
पार्श्वे च भूतपतयः प्रमथाश्च भीमाः ।
शोणाचलेश मुपसृत्य भजेत को वा
नस्यात्तवाम्ब सविधे यदि सन्निधानम् ॥ ६ ॥

கண்டே விஷம் விஷமுசோ புஜகாஃ கபர்தே
பார்ஶ்வே ச பூத பதயஃ ப்ரமதாச்ச பீமாஃ ।
ஶோணாசலேசம் உபஸ்ருத்ய பஜேத கோ வா
நஸ்யாத் தவாம்ப ஸவிதே யதி ஸன்னிதானம் ‖ 6 ‖

(பொருள்) கழுத்தில் விஷம், ஜடையிலோ நஞ்சைக் கக்கும் கொடிய ஸர்ப்பங்கள், பக்கத்திலோ பயத்தை யுண்டு பண்ணுகின்ற பூதநாயகர்களான ப்ரமத கணங் கள். இத்தகைய அருணகிரிநாதனை ஏ தாயே! அருகில் உனது ஸான்னித்யம் இல்லாவிடில் யார்தான் சேவிப் பார்.

शक्तिर्जगज्जनन पालन भञ्जनेषु
भोगेषु दिव्यमहिषी तरुणेन्दु मौलेः ।
सिद्धिः करप्रणयिनी तव सन्निधानं
यन्नासि तस्य तदपीतकुचे न जाने ॥ ७ ॥

ஶக்திர் ஜகஜ் ஜனன பாலன பஞ்சனேஷு
போகேஷு திவ்யமஹிஷீ தருணேந்து மௌளேஃ ।
ஸித்திஃ கர ப்ரணயினீ தவ ஸன்னிதானம்
யன்ஞஸி தஸ்ய ததபீதகுசே ந ஜானே ॥ 7 ॥

(பொருள்) சந்திரகலையை சிரத்தில் அணிகின்ற உனது பதியான பரசிவத்திற்கு உலகத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற கார்யங்களில் சக்தியாய் விளங்குகிறாய். போகங்களை யனுபவிப்பதற்கு மஹிஷியாய் விளங்குகிறாய். உனது ஸான்னித்யமே கையில் கிடைக்கும் ஸித்தியாயுள்ளது. ஏ உண்ணாமுலையாளே! அவருக்கு நீ எவ்விதமாக ஆகவில்லை என்பது எனக்குத் தெரியவில்லை. ஈச்வரனின் கார்ய மனைவற்றிற்கும் பராசக்தி துடர்ந்து இருக்கிறாள் என்று கருத்து.

त्वं साक्षिणी प्रलयभैरव ताण्डवानां
त्वं शेषिणी सहरिधातृचराचराणाम् ।
त्वं मोचिनी सकलसंसृति जालकानां
त्वां ब्रह्मसंविदमपीतकुचे नमामि ॥ ८ ॥

த்வம் ஸாக்ஷிணீ ப்ரலய பைரவ தாண்டவானும்
த்வம் ஶேஷிணீ ஸஹரிதாத்ரு சராசரானும் ।
த்வம் மோசினீ ஸகல ஸம்ஸ்ருதி ஜாலகானும்
த்வாம் ப்ரம்ஹ ஸம்வித மபீதகுசே நமாமி ॥ 8 ॥

(பொருள்) ஏ உண்ணாமுலையாளே! மஹாப்ரளய காலத்தில் உள்ள கால பைரவமூர்த்தியின் தாண்டவங்களுக்கு நீ ஸாக்ஷியாகவும் விஷ்ணு, பிரும்மா முதலிய சராசரப்பொருள் அனைவற்றிற்கும் நீயே தலைவி—அல்

லது ப்ரளய காலத்தில் மீதமாகவும், வலைபோன்ற வாழ்க்கையிலுள்ள துன்பமனைவற்றையும் விலக்குபவளாயும் விளங்குகிறாய். பிரும்ம வித்யாரூபிணியான உன்னை வணங்குகிறேன்.

ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதரவர்கள் ஐந்து பூதக்ஷேத்ரங்களில் தேஜோமயமாய் விளங்கும், திருவண்ணாமலையில் கார்த்திகை ஒளி தர்சனத்திற்குச் சென்றார்கள். அங்கு குளிர், ஜ்வரம் ஏற்பட்டு, மிகக்கடுமையாக வருந்திய சமயம் அம்பாளை இத்துதிகளால் வழிபட்டார்கள். உடன் ஜ்வரம் நீங்கியது கலியிலும் கைகண்ட பயனை யளிக்கும் இந்த துதியைச் சொல்பவருக்கு வியாதிகள் நீங்கும். ஜ்வரத்தினால் வருந்துபவர் அருகில் இதை ஜபித்தால் ஜ்வரம் நீங்கும்.

**श्री अपीतकुचाम्बास्तवः संपूर्णः**

---

## ॥ हरि हराभेदस्तुतिः ॥

ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்த்ரர் இயற்றிய

# ஹரிஹரா பேத ஸ்துதி

**मारमण मुमारमणं फण धरतल्पं फणाधराकल्पम् ।**
**मुरमथनं पुरमथनं वन्दे बाणारिमसम बाणारिम् ॥ १ ॥**

மா ரமண முமாரமணம்
பணதர தல்பம் பணாதராகல்பம் ।
முரமதனம் புரமதனம்
வந்தே பாணாரி மஸம பாணாரிம் ‖ 1 ‖

(பொருள்) லக்ஷ்மியின் பதியாயும், பார்வதியின் பதியாயும் ஆதிசேஷனைப் படுக்கையாயுடையவரும், ஆதிசேஷனை அணியாய்க் கொண்டவரும், முரன் என்ற அசுரனைக் கொன்றவரும் த்ரிபுராசுரர்களை யழித்தவரும் பாணாசுரனுக்கு எதிரியும் மன்மதனுக்கு எதிரியுமான ஹரியையும், சிவனையும் வணங்குகிறேன்.

गोनयनमिलानयनं रवि शशि नेत्रं रवीन्दुवह्नयक्षम् ।
स्मरतनयं गुहतनयं वन्दे वैकुण्ठ मुडुपति चूडम् ॥ २ ॥

கோநயன மிளாநயனம்
ரவி சசி நேத்ரம் ரவீந்து வஹ்ன்யக்ஷம் ।
ஸ்மரதனயம் குஹதநயம்
வந்தே வைகுண்டமுடுபதி சூடம் ॥ 2 ॥

(பொருள்) பசுக்களை மேய்ப்பவனும், விருஷபவாஹனனும், சூரிய சந்திரர்களைக் கண்களாயுடையவனும் சூரிய சந்திர அக்னிகளைக் கண்களாய்க் கொண்டவனும், மன்மதனைப் புதல்வனாயுடையவனும், முருகனை மகனாய்க் கொண்டவனும், வைகுண்ட என்றும் பெயருள்ளவனும், சந்திரகலையை சிரஸ்ஸில் தரித்தவனுமான ஹரியையும் சிவனையும் வணங்குகிறேன்.

कृष्ण तनुमुमार्धतनुं श्वशुरगृहस्थं सुमेरु शृङ्गस्थम् ।
दशवपुषं वसुवपुषं वन्दे भूजानिमखिल भूपालम् ॥ ३ ॥

கிருஷ்ணதனு முமார்த்ததனும்
ச்வசுர க்ருஹஸ்தம் ஸுமேரு ச்ருங்கஸ்தம் ।
தசவபுஷம் வஸுவபுஷம்
வந்தே பூஜானிமகில பூபாலம் ॥ 3 ॥

(பொருள்) கருத்த சரீரத்தையுடையவரும் பார்வதியை பாதி சரீரமாய்க் கொண்டவரும், மாமனுரின் இடமான திருப்பாற் கடலிலுள்ளவரும், மஹாமேரு மலையின் சிகரத்திலுள்ளவரும், பத்துவிதமான அவதாரங்களை எடுத்தவரும், பஞ்சபூதங்கள் சூரியன், சந்திரன் யாகம் செய்பவன் என்ற எட்டு சரீரத்தையுடையவரும், பூதேவியை மனைவியாய்க்கொண்டவரும், எல்லா உலகங்களையும் காப்பாற்றுபவனுயுமுள்ள ஹரியையும், சிவனையும் வணங்குகிறேன்.

**कुधरधरमुदग्निधरं जलधिसुताकान्त मगजाकान्तम् ।**
**गरुडस्थं वृषभस्थं वन्दे पञ्चास्त्र मखिलदिग्वस्त्रम् ॥ ४ ॥**

குத்ரதரமுதக்னிதரம்
ஜலதிஸுதா காந்த மகஜாகாந்தம் ।
கருடஸ்தம் வ்ருஷபஸ்தம்
வந்தே பஞ்சாஸ்த்ரமகில திக்வஸ்த்ரம் ॥ 4 ॥

(பொருள்) கோடரியைத் தரிப்பவரும், (பரசுராமர்) மழுவை தரிப்பவரும் பாற்கடலிலுதித்த லக்ஷ்மியின் கணவனும் மலைமகளான பார்வதியின் கணவனும் கருடவாஹனத்தில் உள்ளவரும், விருஷப வாஹனத்திலுள்ளவரும், சங்கம் சக்ரம் கதை சார்ங்கம் தாமரை என்ற ஐந்து ஆயுதங்களை அணிந்தவரும் திசையனைவற்றையுமாடையா யணிந்தவருமான ஹரியையும், சிவனையும் வணங்குகிறேன்.

**ब्रह्मसुत मृगादिनुतं गजगिरिवासं गजेन्द्रचर्माङ्गम् ।**
**सुरशरणं हरिशरणं वन्दे भूदारमखिल(अचल)भूदारम् ॥ ५ ॥**

பிருஹ்மஸூத ம்ருகாதிநுதம்
கஜகிரிவாஸம் கஜேந்த்ர சர்மாங்கம் ।
ஸூரசரணம் ஹரிசரணம்
வந்தே பூதார்ர மகிலபூதாரம் । ॥ 5 ॥

(பொருள்) பிர்மதேவனைப் புதல்வனாய்க் கொண்டவனும், ருக்வேதம் முதலியதால் துதிக்கப்பெற்றவனும், ஹஸ்திகிரியில் வசிப்பனும், (வரதராஜன்) யானைத் தோலைப் போர்த்தவனும், தேவர்களுக்கு சரணனும் விஷ்ணுவிற்கு சரணனும் (சரணன்-காப்பாற்றுபவன்) பூமிதேவியை மனைவியாய்க்கொண்டவனும் எல்லா உலகங்களுக்கும் பதியாயும் (மலைமகளின் கணவனும்) உள்ள ஹரியையும் சிவனையும் நமஸ்கரிக்கின்றேன்.

पार्थसख मपास्तमखं जलधरकान्ति जलन्धरा रातिम् ।
विधि विनुतं हरिविनुतं वन्दे नीलेशमखिल भूतेशम् ॥ ६ ॥

பார்த்தஸகமபாஸ்தமகம்
ஜலதரகாந்திம் ஜலந்தராராதிம் ।
விதிவிநுதம் ஹரிவிநுதம்
வந்தே நீலேச மகில பூதேசம் ॥ 6 ॥

(பொருள்) அர்ஜுனனுக்குத் தோழனும் தக்ஷயாகத்தை யழித்தவனும் மேகம் போன்ற காந்தியுள்ளவனும், ஜலந்தராசுரனைக் கொன்றவனும், பிர்மதேவனால் துதிக்கப்பெற்றவனும், விஷ்ணுவால் துதிக்கப் பெற்றவனும் நீலாதேவிக்குப் பதியும், எல்லாப் பிராணிகளுக்கும் பதியுமான ஹரியையும் சிவனையும் வணங்குகிறேன்.

पीतपटं हरुण जटं परिमल देहं पवित्र भस्माङ्गम् ।
जलजकरं डमरुकरं वन्दे योगस्थ मखिल योगीड्यम् ॥ ७ ॥

பீதபடம் ஹ்யருணஜடம்
பரிமள தேஹம் பவித்ர பஸ்மாங்கம் ।
ஜலஜகரம் டமருகரம்
வந்தே யோகஸ்தமகில யோகீட்யம் ‖ 7 ‖

(பொருள்) 'பீதாம்பரமணிந்தவரும் சிவப்பு ஜடைகளைத் தரித்தவரும், நறுமணம் கமழும் உடலையுடையவனும் தூய்மையான விபூதியை யணிந்தவனும், சங்கத்தைக் கையில் ஏந்தியவனும் மருவைக் கையில் தரித்தவனும், யோக நிலையில் இருப்பவனும், யோகிகளனைவராலும் துதிக்கப்பெற்றவனுமான ஹரியையும், சிவனையும் சேவிக்கிறேன்.

चक्रकरमभयकरं मणिमय भूषं फणामणी भूषम् ।
धृत धनुषं गिरि धनुषं वन्दे गोविन्द मनघगो वाहम् ॥ ८ ॥

சக்ரகரமபயகரம்
மணிமயபூஷம் பணாமணீபூஷம் ।
த்ருத தநுஷம் கிரிதனுஷம்
வந்தே கோவிந்த மனக கோ வாஹம் ‖ 8 ‖

(பொருள்) சக்கரத்தைக்கையில் தரித்தவரும், அபயமளிக்கும் கையையுடையவரும், இரத்தினாபரணங்களையணிந்தவரும், நாகரத்தினங்களை அணிந்தவரும், சார்ங்கமென்ற வில்லையணிந்தவரும், மஹா மேருமலையை வில்லாயுடையவனும், பசுக்களிடம் அன்புள்ள

வனும், தூய்மையான ரிஷபத்தின்மீது செல்பவனுமான ஹரியையும், சிவனையும் வணங்குகிறேன்.

मोमारमण स्तवनं पठन्ति भक्त्या हरीशयोः कृपया ।
भुक्त्वेहसकल भोगानन्ते गच्छन्त्यनुत्तमं धाम ॥ ९ ॥

மோ மாரமண ஸ்தவனம்
பட்ந்தி பக்த்யா ஹரீசயோஃ க்ருபயா ।
புக்த்வேஹ ஸகல போகாந-
ந்தே கச்சந்த்யநுத்தமம் தாம ॥ 9 ॥

இலக்குமி, பார்வதி இவர்களின் பதிகளுடைய ஸ்துதியை பக்தியுடன் படிப்பவர்கள் ஹரி, ஈசுவரன் இவர்களின் கிருபையினால் இவ்வுலகில் எல்லாவித போகங்களையு மனுபவித்து கடைசியில் நிகரற்ற ஸ்தானத்தை யடைகிறார்கள்.

ஹரிஹராபேத ஸ்துதி முடிவு பெற்றது.

---

वस्तां पिशङ्गं वसनं दिशोवा गरुत्मतायातु ककुद्मता वा ।
निद्रातुवा नृत्यतुवाऽधिरङ्गं न वस्तु भेदप्रतिपत्तिरस्ति मे ॥

வஸ்தாம் பிசங்கம் வஸனம் திசோவா
கருத்மதாயாது ககுத்மதாவா
நித்ரா துவா ந்ருத்யது வா அதிரங்கம்
நவஸ்து பேத ப்ரதிபத்திரஸ்தி மே ॥

பீதாம்பரத்தை யணிந்தாலும், திசைகளை ஆடையா யணிந்தாலும், கருடன்மீது சென்றாலும் ரிஷபத்தின்மீது

சென்றாலும், மேடையில் உறங்கினாலும், ஆடினாலும் எனக்கு சிவன், விஷ்ணு என்ற வேறுபட்ட அறிவு கிடையாது.

இங்கு கூறப்படும் சுலோகங்களில் உள்ள அடைமொழிகள் முதலில் விஷ்ணுவையும் பிறகு சிவனையும் குறிக்கின்றன.

ஸ்ரீமத் தீக்ஷிதரவர்கள் இரு தேவர்களையும் பேதமின்றி வழிபட்டார் என்பது கவனிக்கத்தக்கது.

## श्रीमदप्पय्यदीक्षित कृतं

## मार्गबन्धु स्तोत्रम्

## மார்கபந்து ஸ்தோத்ரம்

ப்ரதிதினம் ஸாயங்காலத்திலும், வெளியில் செல்லும் சமயங்களிலும், இடையூறின்றி கார்ய ஸித்தி யடைவதற்கு ஜபம் செய்ய வேண்டியது—

**शंभो महादेव देव, शिव शंभो महादेव देवेश शंभो, शंभो महादेव देव ।**

சம்போ மஹாதேவ தேவ, சிவ சம்போ மஹாதேவ தேவேச சம்போ, சம்போ மஹாதேவ தேவ।

**नित्यं चिदानन्दरूपं, निह्नुताशेष लोकेश वैरि प्रतापं ।**
**कार्तस्वरागेन्द्र चापं, कृत्तिवासं भजे दिव्य सन्मार्ग बन्धुम् ॥**
**(शंभो)**

நித்யம் சிதாநந்த ரூபம், நிஹ்னுதாசேஷ
லோகேச வைரிப்ரதாபம், கார்த்தஸ்வரா
கேந்த்ர சாபம், க்ருத்திவாஸம் பஜே
திவ்ய ஸன்மார்க்க பந்தும் ॥ (சம்போ) 1

(பொருள்) அழிவற்றவரும், அறிவையும் ஆனந்தத்தையும் வடிவமாய்க் கொண்டவரும், தேவர்களின் எதிரியான அஸுரர்களின் கொழுப்பை அடக்கியவரும், மஹாமேரு மலையை வில்லாக அணிந்தவரும், யானையின் தோலை ஆடையாய்க் கொண்டவரும், வழியில் நடப்பவர்களின் பயத்தை நீக்கும் பந்துவாயுமுள்ள பரமசிவனை ஸேவிக்கிறேன்.

अङ्गे विराजद्भुजङ्गं, अभ्रगङ्गातरङ्गाभिरामोत्तमाङ्गं
ओंकारवाटीकुरङ्गं, सिद्ध संसेविताङ्घ्रिं भजे मार्गबन्धुम् ॥
(शंभो)

அங்கே விராஜத் புஜங்கம், அப்ரகங்கா தரங்கா
பிராமோத்த மாங்கம், ஓங்காரவாடீ
குரங்கம், ஸித்த ஸம்ஸேவிதாங்க்ரிம்
பஜே மார்க்கபந்தும் ॥ (சம்போ) 2

(பொருள்) ஸர்ப்பங்கள் விளங்கும் அவயவமுள்ளவரும், கங்கையின் அலைவரிசையினால் அழகிய சிரத்தையுடையவரும், ஓங்காரமாகிய தோட்டத்தில் மான் போல் தோன்றுபவரும், சித்தி பெற்ற முனிவர்கள் ஸேவிக்கும் பாதமுள்ளவரும், வழி நடப்பவரின் ஆபத்தை நீக்குபவருமான பரமசிவனை பஜனம் செய்கிறேன்.

मन्दार भूतेरुदारं, मन्दरागेन्द्रसारं महागौर्यदूरं ।
सिन्दूर दूरप्रचारं, सिन्धुराजाति धीरं भजे मार्गबन्धुम् ॥

மந்தார பூதேருதாரம், மந்தராகேந்த்ர
ஸாரம் மஹா கௌர்யதூரம்,
ஸிந்தூர தூரப்ரசாரம், ஸிந்துராஜாதி
தீரம் பஜே மார்க்க பந்தும் ॥ (சம்போ) 3

(பொருள்) மந்தாரமென்ற கல்ப தருவைக் காட்டிலும் கொடையாளியாயும், மந்த்ர மலைபோல் பலமுள்ளவரும், அம்பாளை பாதி தேஹமாயுடையவரும், விருஷபம் மீது ஏறி தூரம் செல்பவரும், ஸமுத்ரம் போல் மிக கம்பீரமாயுள்ளவருமான மார்க்கபந்துவை துதிக்கிறேன்.

कन्दर्प दर्पघ्न मीशं कालकण्ठं महेशं महाव्योमकेशम् ।
कुन्दाभदन्तं सुरेशं, कोटिसूर्यप्रकाशं भजे मार्गबन्धुम् ॥ (शंभो)

கந்தர்ப்ப தர்ப்பக்னமீசம், காலகண்டம்
மஹேசம் மஹாவ்யோம கேசம் ।
குந்தாபதந்தம் ஸுரேசம், கோடிஸூர்ய
ப்ரகாசம் பஜே மார்க்கபந்தும் ॥ (சம்போ) 4

(பொருள்) மன்மதனின் கொழுப்பை அடக்கியவரும், உலகிற்கு நாயகனும், விஷத்தால் கருத்த கழுத்துள்ளவரும், சிறந்த நாயகனும், ஆகாயத்தை கேசமாயுடையவரும், குந்த புஷ்பம் போன்ற பற்களையுடையவரும் தேவர்களுக்கு நாயகனும், கோடி ஸூர்யன் போல் ப்ரகாசமுள்ளவருமான மார்க்க பந்துவை ஸேவிக்கிறேன்.

फालावनम्रत्किरीटं, फालनेत्रार्चिषा दग्धपंचेषु कीटं ।
शूलाहतारातिकूटं, शुद्धमर्धेन्दुचूडं भजे मार्गबन्धुम् । (शंभो)

பாலாவ நம்ரத்கிரீடம், பாலநேத்ரார்ச்சிஷா
தக்த பஞ்சேஷு கீடம் । சூலா ஹதாராதி கூடம்।
சுத்த மர்த்தேந்து சூடம்
பஜே மார்க பந்தும் ॥ (சம்போ) 5

(பொருள்) நெற்றிவளையில் விளங்கும் கிரீடமுள்ளவரும், நெற்றிக்கண்ணால் மன்மதனை எரித்தவரும், சூலத்தினால் எதிரிகளை அழித்தவரும், பரிசுத்தரும், சந்திர கலையைத் தரித்தவருமான மார்க பந்துவை துதிக்கிறேன்.

अप्पय्य यज्वेन्द्रगीतं, स्तोत्रराजं पठेद्यस्तु भक्त्याप्रयाणे ।
तस्यार्थसिद्धिं विधत्ते, मार्गमध्येऽभयं चाशुतोषोमहेशः ॥
(शंभो)

அப்பய்ய யஜ்வேந்த்ரகீதம், ஸ்தோத்ரராஜம்
படேத் யஸ்து பக்த்யா ப்ரயாணே ।
தஸ்யார்த்த ஸித்திம் விதத்தே, மார்க மத்யேऽ
பயம் சாசு தோஷோ மஹேசः ॥ (சம்போ) 6

(பொருள்) அப்பய்ய தீக்ஷிதேந்த்ரர்களால் செய்யப்பெற்ற இந்த சிறந்த ஸ்தோத்ரத்தை ப்ரயாணம் செய்யும் பொழுது ஜபிப்பவர்கள் விரும்பிய பயனையடைகிறார்கள். மேலும் விரைவில் சந்தோஷிக்கின்ற மஹேச்வரன் வழியின் நடுவில் பயமின்றி நம்மைக் காப்பாற்றுகிறார்.

மஹாப்ரதோஷ ஸமயத்தில் சிவனின் ஸன்னிதியில் எல்லா தேவர்களும் வருவதால் அப்பொழுது சிவ தர்சனம் செய்து தேவர்களின் அருளை அடைய வேண்டும்.

---

## ॥ रत्नत्रयपरीक्षा ॥

## ரத்நத்ரய பரீக்ஷா

*(ஸ்ரீமான் அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் அருளியது)*

नित्यं निर्दोषगन्धं निरतिशयसुखं ब्रह्मचैतन्यमेकम्
धर्मो धर्मीतिरूपद्वयमयति पृथग्भूय मायावशेन ।
धर्मस्तत्रानुभूतिस्सकलविषयिणी सर्वकार्यानुकूला
शक्तिश्चेच्छादिरूपा भवति गुणगणश्चाश्रयस्त्वेक एव ॥ १ ॥

*நித்யம் நிர்தோஷகந்தம் நிரதிசய ஸுகம்*
*ப்ரும்ம சைதன்யமேகம்*
*தர்மோ தர்மீதி ரூபத்வயமயதி*
*ப்ருதக்பூய மாயாவசேந ।*
*தர்மஸ்தத்ராநுபூதிஸ் ஸகல விஷயிணீ*
*ஸர்வ கார்யாநுகூலா*
*சக்திஸ்சேச்சாதி ரூபா பவதி*
*குண கணஸ்சாச்ரயஸ்த்வேக ஏவ ॥* 1

(பொருள்) நிகழ் காலம், இறந்த காலம், வரும் காலம் என்ற மூன்று காலங்களில் தோன்றுவதும், சிறிதும் தோஷமற்றதும், தனக்கு மேலான சுக மற்றதும், ஒன்ருயும், அறிவு வடிவாயுமுள்ள பர ப்ரஹ்ம ஸ்வரூபம் மாயையின் சேர்க்கையினுல் பிரிவை யடைந்து தர்மம் தர்மி என்ற இரு உருவத்தை அடைகிறது. அதில் தர்மம் என்பது ஒன்ருகவே இருந்து கொண்டு தனக்கு இருப்பிடமான தர்மிக்கு

எல்லாவற்றையும் விளக்கும் அறிவாயும், கார்யங்களனைவற்றையும் செய்ய உதவியான இச்சை (எண்ணம்) முதலிய சக்தியாயும் மற்றுமுள்ள நற்குணக் குவியலாயும் இருக்கின்றது.

உலகிற்குக் காரணமான உபநிடதங்களில் காணப்படும் ப்ரஹ்மம் தன்னிடத்தில் பல்வேறு பொருள்களைக் காண்மிக்கத் தகுந்த சக்தியுள்ளது. அந்த சக்தி மாயையிலுல் தோன்றுகிறது. சக்தியின் திறமையைப் பின்பு கூறுகிருர். எவ்வளவு சக்தி இருந்தாலும் சக்தன் (இருப்பிடம்) ஒன்று தான்; அவனே சிவன்.

वेदज्ञा धर्ममेतं प्रविततमखिलाधारमाकाशमाहुः
किंचानन्दं मनोवागविषय मधिकं धर्मिणो वर्णयन्ति ।
सत्तास्फूर्तिस्सुखं च त्रयमपि जगतां संगिरन्ते तदंशम्
प्राणाकाशाद्युपास्तीः कतिचिदपि तदालम्बनास्ते वदन्ति ॥

வேதஞ்ஞா தர்மமேதம் ப்ரவிதத
மகிலாதாரமாகாச மாஹுः
கிஞ்சாநந்தம் மநோ வாகவிஷய
மதிகம் தர்மிணோ வர்ணயந்தி ।

ஸத்தாஸ்பூர்த்தி ஸ்ஸுகம் ச த்ரயமபி
ஜகதாம் ஸங்கிரந்தே ததம்சம்
ப்ராணுகாசாத்யுபாஸ்தீः கதிசிதபி
ததாலம்பநாஸ்தே வதந்தி ॥ 2

(பொருள்) இந்த தர்மத்தை எங்கும் நிறைந்த தாயும் எல்லாவற்றிற்கும் இருப்பிடமாயுமுள்ள ஆகாசம் என்று வேதமறிந்த பெரியோர் கூறுகின்றனர். மேலும் தர்மியான சிவனுக்கு மனதிற்கும், வாக்கிற்கும் எட்டாத பேரானந்தமாயும் வர்ணிக்கின்றனர். உலகத்தில் உள்ள ஒவ்வொரு பொருளும் இருத்தல், விளங்குதல், ப்ரியமாக இருத்தல் என்ற மூன்று குணங்களுள்ளதாகவே விளங்குகின்றது. இவை ஸத், சித், ஆனந்தம் எனப்படும். இம்மூன்றையும் அந்த தர்மமாகிய சக்தியின் அம்சமாகக் கூறுகின்றனர். மேலும் உபநிடதங்களில் விதிக்கப்படும் ப்ராண ஆகாச உபாஸனங்களையும், இந்த சக்தியைக் கொண்டே அமைந்ததாகவும் அவர்கள் கூறுகின்றனர்.

பிருஹதாரண்யகம் என்ற உபநிடதத்தில் இவ்வுலகம் எங்கு நிலை பெற்றிருக்கிறது என்ற கேள்விக்கு ஆகாசத்தில் என்று விடையளிக்கப் பெற்று, ஆகாசம் எங்கென்றதற்கு அக்ஷர ப்ரஹ்மத்தில் என்று விடை உள்ளது. இங்குள்ள ஆகாசம் என்பது தான் சக்தி. மேலும் ப்ராணன், ஆகாசம் இவைகளிலிருந்து உலகமுண்டாகுவதால் அவை உபாஸிக்கத் தகுந்ததென்று கூறுகிறது. ஆதலால் அவையும் சக்தியே. சிவனுக்கு ஆனந்தமாயும் விளங்குகிறது.

**कर्तृत्वं तस्य धर्मो कलयति जगतां पञ्चके सृष्टिपूर्वे**
**धर्मः पुंरूपमाप्त्वा सकलजगदुपादान भावं बिभर्ति ।**

स्त्रीरूपं प्राप्य दिव्याभवति च महिषी स्वाश्रयस्यादिकर्तुः
प्रोक्तौ धर्मप्रभेदावपि निगमविदां धर्मिवत् ब्रह्मकोटी ॥ ३ ॥

கர்த்ருத்வம் தஸ்ய தர்மீ கலயதி
ஜகதாம் பஞ்சகே ஸ்ருஷ்டிபூர்வே
தர்மஃ பும் ரூபமாப்த்வா ஸகல
ஜகதுபாதாந பாவம் பிபர்த்தி ।

ஸ்த்ரீரூபம் ப்ராப்ய திவ்யா பவதி ச
மஹிஷீ ஸ்வாச்ரயஸ்யாதி கர்த்துஃ
ப்ரோக்தௌ தர்மப்ரபேதாவபி
நிகமவிதாம் தர்மிவத் ப்ருஹ்மகோடீ ॥ 3

(பொருள்) கீழ்ச்சொல்லிய தர்மி, தர்மம் என்றதில் தர்மியாகிய பரமசிவன் உலகங்களையுண்டாக்குவது, காப்பது, அழிப்பது, பந்தமளிப்பது, முக்தியளிப்பது என்ற ஐந்து கார்யங்களிலும், கர்த்தாவாக (செய்பவன்) இருப்பதை அடைகிறார். தர்மமாகிய சக்தி புருஷ உருவத்தையடைந்து உலகமனைவற்றிற்கும் உபாதான காரணமாக (குடத்திற்கு மண்போல்) ஆகிறது. ஸ்த்ரீ உருவத்தையடைந்து தனக்கு இருப்பிடமான ஆதிகர்த்தாவான பரசிவத்திற்கு பட்ட மஹிஷியாக ஆகிறாள். கீழ்ச் சொல்லியபடி தர்மம் புருஷ - ஸ்த்ரீ என்ற பிரிவையடைந்தாலும் தர்மியான பரசிவன் போல் ப்ரஹ்ம ஸ்வரூபமாகவே கருதப்படுகிறது.

முதலில் தர்மம் என்ற சக்தி, ஞானம், ஆனந்தம் முதலிய குணமாயும் உலகத்தைப்படைக்கும் சக்தியாயும் தர்மியை அண்டி சூர்யனிடம் ஒளிபோல் பிரிக்க முடியாததாக கூறிவிட்டு இங்கு புருஷ உருவமாய் உலகிற்கு காரணம் ஸ்த்ரீ உருவமாய் பட்டமஹிஷி என்று ஸ்வதந்திரமாக தனியாகக் கார்யம் செய்வதாக் கூறுவது, உபநிடதங்களில் உள்ள ஸித்தாந்தங்களை விளக்குகிறது. மாயா சக்தியின் திறமை பலவிதமாக விளங்குகிறது என்று அறிய வேண்டும்.

**यो सौ धर्मी स शंभुस्स शिव इति परं ब्रह्म चेति प्रसिद्धः**
**याचोक्ता धर्मिणोस्याविघटित महिषी साम्बिकोमेति चित्ता ।**
**यश्चोपादान भूतः पर इह पुरुषश्चैष नारायणोक्त्या**
**ख्यातः श्रीकूर्मवाक्यैरधिगतमिदं नारदस्यापिवाक्यैः ॥ ४ ॥**

யோ ஸௌ தர்மீ ஸ சம்புஸ் ஸ சிவ இதி
பரம் ப்ருஹ்மசேதி ப்ரஸித்தஃ
யாசோக்தா தர்மிணோ ஸ்யாவிகடித
மஹிஷீ ஸாம்பிகோமேதி வித்தா ।
யஸ்சோபா தாநபூதஃ பர இஹ புருஷஸ்
சைஷ நாராயணோக்த்யா
க்யாதஃ ஸ்ரீ கூர்மவாக்யைரதி கதமிதம்
நாரதஸ்யாபி வாக்யைஃ ! 4

(பொருள்) கீழ் சுலோகங்களில் தர்மி - தர்மம் என்று கூறப்பெற்றது. அதில் தர்மி என்றவர் சம்பு - சிவன் - பரப்ருஹ்மம் என்று ப்ரஸித்தி பெற்றவர்.

தர்மியினிடம் பிரிக்க முடியாத மஹிஷியாய் சொல்லப் பெற்றவள் அம்பிகை உமா என்று ப்ரஸித்தியுள்ளவள். புருஷ உருவமாய் உலகிற்கு உபாதான காரணமென்று கூறப்பெற்ற பரம புருஷன் நாராயணன் என்று ப்ரஸித்தி பெற்றவன். இவ்விதம் கூர்ம புராண வசனங்களாலும் நாரதரின் வாக்யங்களாலும் அறிவிக்கப் பெற்றது.

கூர்ம புராணத்தில் பரமசிவன் கௌரீ நாராயணன் இருவரையும் இரு புரத்திலும் அமர்த்தி வீற்றிருக்கும் பொழுது தேவ கன்னிகைகள் இருவரும் யார் என்று வினவ, இவ்விருவரும் நானே, இரு உருவத்துடன் விளங்குகிறேன். எனக்கும் இவர்களுக்கும் பேதம் கிடையாது. எனது உண்மையான உருவத்தை ஒருவரும் அறியார் என்று பதில் கூறுகிறார்.

காஞ்சி மஹிமையைக் கூறும் ஸ்காந்தத்தில் அரசன் ப்ரபாகரன் விஷ்ணுவை உபாஸித்தான். பட்ட மஹிஷி காமாக்ஷியை வழிப்பட்டாள். இவ்விருவருக்கும் அருள் புரிய விஷ்ணுவே தோன்றினர். இருவரும் திருப்தியடைந்தனர். மேலும் பல காரணங்கள் புராணங்களில் சிவ சக்திகளே விஷ்ணு அம்பிகை என்பதற்கு உள்ளன.

**तस्यैवाद्यस्य पुंसः परिणतिरखिलोप्यंबरादि विकारः**
**तस्यैवांशोविरिंचावधिरिह सकलोप्येष संसारिवर्गः ।**

प्राप्यं कृत्वैव तस्य प्रपदनममृतस्याद्यमानन्दमूर्ति-
स्थानं भर्गस्य जुष्टं तदमृततनयैर्देव देवैः पुराणैः ॥ ५ ॥

தஸ்யைவாத் யஸ்ய பும்ஸஃ பரிணதி
ரகிலோப்யம்பராதிர் விகாரஃ
தஸ்யைவாம்சோ விரிஞ்சாவதிரிஹ
ஸகலோப்யேஷ ஸம்ஸாரிவர்கஃ।
ப்ராப்யம் க்ருத்வைவ தஸ்ய ப்ரபதந
மம்ருதஸ்யாத்யமாநந்த மூர்த்தி-
ஸ்தாநம் பர்க்கஸ்ய ஜுஷ்டம் ததம்ருத
தநயைர் தேவதேவைஃ புராணைஃ ‖ 5

(பொருள்) ஆகாசம் முதலிய எல்லா காரியமும் ஆதிபுருஷனை அந்த நாராயணனின் பரிணாமம், (கார்யம்) பிரும்மதேவன் வரையிலுள்ள எல்லா ஜீவ ராசிகளும் அவருடைய அம்சமே, அமிருதன் என்று ப்ரஸித்திபெற்ற பர்கனுடைய (சிவனுடைய) முதன்மையானதும், ஆனந்தரூபமானதும், மிகப்பழமை யான சிரேஷ்டர்களான சிவகுமாரர்களால் ஸேவிக்கப் பெற்றதுமான ஸ்தானத்தை நாராயணனைச் சரணாகதி செய்த பிறகே அடைய வேண்டும்.

நாராயணனே ஆகாசம் முதலிய பஞ்ச பூதங்கள். பிர்மதேவன் முதலிய ஜீவ வர்கங்கள் அனைவற்றிர்க்கும் உபாதன காரணம், அவருடைய அனுக்ரஹத்தினாலேயே அழிவற்ற சிவ பதத்தையடையலாம் என்பது இங்கு கூறப்பெற்றது.

ख्याताः कोट्यो नवाष्टादश न परिमितास्थाणु वैगुण्ठ वेधः
शक्तीनां यत्कलांशाः त्रिभुवन विषयाश्शंकरस्यैव भोग्याः ।
या विख्याता कृपाब्धिश्श्रुतिशिरसि परब्रह्मविद्याप्रदात्री
साहित्यं सा भवानी भजति नियमतश्शंकरोपासनासु ॥ ६ ॥

க்யாதா: கோட்யோ நவாஷ்டாதச
ந பரிமிதாஸ்தாணு வைகுண்ட வேத:
சக்தீநாம் யத்கலாம்சா: த்ரிபுவந விஷயாஸ்
சங்கரஸ்யைவ போக்யா: ।

யா விக்யாதா க்ருபாப்திஸ்ருதி
சிரஸி பரப்ரும்மவித்யா ப்ரதாத்ரீ
ஸாஹித்யம் ஸா பவாநீ பஜதி
நியமதச்சங்கரோ பாஸநாஸு ॥ 6

(பொருள்) உமாதேவியின் அம்சங்களான மூவுலகிலும் பரவியிருக்கின்ற சிவசக்திகளான தாமஸமான ஒன்பது கோடி சக்திகளும் விஷ்ணு சக்திகளான ராஜஸமான பதினெட்டு கோடி சக்திகளும் பிரும்ம சக்திகளான ஸாத்விகமான அனந்த சக்திகளும் பரமசிவனுக்கே போக்யர்கள். கருணைக் கடலென்றும் பிரும்ம ஞானத்தைக் கொடுப்பவள் என்றும் உபநிடதத்தில் ப்ரஸித்திப்பெற்ற பவானி உமாதேவி, சிவனையுபாஸிக்கும் பொழுதெல்லாம் சேர்ந்திருப்பதை அவச்யமாய் அடைகிருள்.

சக்திகள் அனைவற்றும் அம்பிகையின் அம்சமாதலால் அந்த சக்திகளையனுபவிக்கும் புருஷர்களும்

சிவனுடைய அம்சமாகிருர்கள். பரமசிவனே அந்தந்த ரூபத்துடன் சக்திகளையனுபவிக்கிருர் என்று வராஹ புராணம் ஹரிவம்சம் கூறுகின்றன.

அம்பாளே பிரும்ம வித்யையை யளிப்பவள் என்பது கேன உபநிஷத்தில் தேவர்களுக்கும் பிரும்மத்தையுபதேசம் அம்பாள் செய்தாள் என்பது சான்ருகும். அவளுடன் கூடவே சிவோபாஸனம் செய்ய வேண்டுமென்பது "உமாஸ ஹாயம் பரமேச்வரம் ப்ரபும்" என்பது முதலான உபநிடதங்களில் உள்ளது.

श्रीमत्कूर्मेण याऽत्याश्रमरत विषया भवनोक्ता तृतीया
दिव्यस्थानप्रदात्री सगुणविषयिणी शंकरालम्बना सा ।
ये त्वन्ये भावने ते सरसिजनयनेनादिशक्त्या च युक्ते
प्राविण्यौ ते तु तस्याः क्रमिकफलयुते भौतिकं सांख्यमाप्ते ॥

ஸ்ரீமத் கூர்மேண யாऽத்யாச்ரமரத
விஷயா பாவநோக்தா த்ருதீயா
திவ்யஸ்தாந ப்ரதாத்ரீ ஸகுண விஷயிணீ
சங்கராலம்பநா ஸா ।
யே த்வந்யே பாவநே தே ஸரஸிஜ
நயநே நாதிசக்த்யாச யுக்தே
ப்ராபிண்யௌ தே து தஸ்யா:
க்ரமிகபலயுதே பௌதிகம் ஸாங்க்யமாப்தே ॥

(பொருள்) வர்ணச்ரமங்களைக் கடந்த பரமஹம்ஸர்களுக்கு அர்ஹமான ஸ்ரீ கூர்மாவதாரமெடுத்த பகவானுல் சொல்லப் பெற்ற மூன்ருவ

தான உபாஸனம் ஸகுண ப்ரஹ்மமான பரமேச்வரனைப் பற்றியதாக திவ்ய பதமான சிவபதத்தைக் கொடுக்கின்றது. கூர்மராஜனுல் சொல்லப் பெற்ற மற்ற இரு உபாஸனங்களும் முறையே நாராயணனையும் பரா சக்தியையும் பற்றியவை. அவை பௌதிகம் ஸாங்க்யம் என்ற பெயர் கொண்டவை. பற்பல பயனைக் கொடுத்து முற்கூறிய பரமசிவ உபாஸனையையடைவிக்கின்றன.

கூர்ம புராணத்தில் பௌதிகம் ஸாங்க்யம், அந்திமம் என்று மூன்று உபாஸனங்கள் விதிக்கப் பெற்றன. முன் இரு உபாஸனங்களில் கிருஹஸ்தர்களும், கடைசி உபாஸனத்தில் அத்யாச்ரமிகளும் அதிகாரிகள், முன் இரு உபாஸனங்கள் விஷ்ணு, சக்தியைப் பற்றியவை மூன்ருவது சிவனைப் பற்றியது சிவபதத்தையளிப்பது. முந்திய உபாஸகர்கள் ஆருருக்ஷுக்கள் என்றும் மூன்ருவது உபாஸகர் ஆரூடர் என்றும் கூறப்படுகின்றனர். சக்தி விஷ்ணு உபாஸனம் செய்தவர்களே அவர்கள் அருளால் சிவோபாஸனத்தில் அதிகாரிகளாகின்றனர் என்பது முதலியது கூர்ம புராண வரலாறு.

**विद्वांसः शंकरस्य श्रुतिमतिमहितोपासनावासनाभिः**
**लब्धस्वान्त प्रतिष्ठास्सुदृढमभिधया तं विलोक्यात्मनैव ।**
**गोलोकस्योर्ध्व भागादपि परमपदाद्वैष्णवस्योर्ध्वदेशे**
**भास्वत्कोटिप्रभं यान्त्यपुनरपगमस्थानमानन्दरूपम् ॥ ८ ॥**

வித்வாம்ஸঃ சங்கரஸ்ய ச்ருதிமதி
மஹிதோபாஸநாவாஸநாபிঃ
லப்தஸ்வாந்தப்ரதிஷ்டா ஸ்ஸுத்ருட
மபிதயா தம் விலோக்யாத்மநைவ ।
கோ லோகஸ்யோர்த்வ பாகாதபி
பரமபதாத்வைஷ்ணவஸ்யோர்த்வதேசே
பாஸ்வத்கோடி ப்ரபம் யாந்த்ய புந -
ரபகமஸ்தாந மாநந்த ரூபம் ॥ 8

(பொருள்) பரமசிவனைப் பற்றிய ச்ரவண மனன உபாஸன வாஸனைகளால் ஒருமைப்பட்ட மனதை யுடைய வித்வான்கள், மனதினுல் பரமசிவனை தன்னுேடு அபின்னனுக (ஒன்ருக) நிச்சயமாய் நேரில் பார்த்து (ஸாக்ஷாத்காரம் செய்து) கோலோகத்திற்கும் மேலேயுள்ள நாராயணனுடைய பரம பதம் என்ற லோகத்தைக் காட்டிலும் மேற்பட்ட தேசத்தில் இருக்கின்ற கோடி சூர்யப்ரகாசமான ஆனந்த வடிவமான - திரும்பி வரக்கூடாத ஸ்தானத்தை யடைகின்றனர்

வேதாந்தங்களில் ச்ரவண மனன நிதித்யாஸனம் செய்து ப்ருஹ்ம ஸாக்ஷாத்காரத்தையடைந்தால் மோக்ஷம் ஏற்படுமென்று கூறப்பட்டுள்ளது. அந்த ப்ருஹ்மம் பரமசிவனே. அவரை ஸாக்ஷாத்காரம் செய்து மோக்ஷமடைய வேண்டும். அது சிவபதம் மற்ற உலகங்களுக்கு மேலுள்ளது.

இவ்விதம் மஹாபாரதம் அனுசாஸநபர்வ சிவ தர்மோத்தரம் ஸ்காந்தம் காசீ கண்டம் கூர்ம புராணம் முதலியதில் கூறப் பெற்றது.

आमथ्य भाष्य दुग्धाब्धेः आप्तं रत्नत्रयं ततः ।
शंभुर्गौरी हरिश्चेति तच्च सम्यक् परीक्षितम् ॥

ஆமத்ய பாஷ்ய துக்தாப்தேः
ஆப்தம் ரத்ன த்ரயம் ததः ।
சம்புர் கௌரீ ஹரிச்சேதி
தச்ச ஸம்யக் பரீக்ஷிதம் ॥

இவ்விதம் ஸ்ரீ கண்டாசார்யர்களின் பிருஹ்ம ஸூத்ர பாஷ்யம் என்ற பாற்கடலைக் கடைந்து அதில் ஸாரமான சிவன் விஷ்ணு அம்பாள் என்ற மூன்று ரத்னங்களை எடுத்து நன்கு விசாரிக்கப் பெற்றது.

---

௨

## பஞ்சரத்ன ஸ்துதி

भूतस्य जात इति वारिरुहासनस्य
जातो बृहन्निति हरेश्च जनिः प्रसिद्धा ।
यस्मादजात इति मन्त्र वरोपदिष्टात्
तं रुद्रमेव जनितः चकितः प्रपद्ये ॥ १ ॥

பூதஸ்ய ஜாத இதி வாரிருஹாஸனஸ்ய
ஜாதோ ப்ருஹந்நிதி ஹரேச்ச ஜநிः ப்ரஸித்தா ।
யஸ்மாதஜாத இதி மந்த்ர வரோபதிஷ்டாத்
தம் ருத்ரமேவ ஜனிதः சகிதः ப்ரபத்யே ॥ 1

(பொருள்) இந்த ஐந்து சுலோகங்களால் எல்லா தேவர்களிலும் மிகச் சிறந்தவர், அனாதியானவர் பரம

சிவனே என்பதை வேதம், ப்ரும்ம ஸூத்ரம், புராணங்கள் இவைகளைக் கொண்டு தீர்மானிக்கின்றார்.

தாமரையில் அமர்ந்த பிரும்ம தேவனுக்கு "பூதஸ்ய ஜாதః பதிரேக ஆஸீத்" என்றும், விஷ்ணுவிற்கு ஜாதோ ப்ருஹந் என்றும் வேதம் பிறப்பைக் கூறுகின்றது அஜாதோ ருத்ரః என்று சிவன் பிறப்பற்றவன் என்றும் கூறுகிறது. ஆதலால் பிறப்பிலிருந்து பயந்த நான் அந்த சிவனையே சரணமடைகிறேன்.

उक्त्वा प्रसूतिमज शौरि हरेश्वराणां
संसूच्यदीपक सहोक्तिभिरन्यनिघ्नाम् ।
तां सन्यधारयदथर्वशिखाहियस्य
तं सर्वकारण मनादि शिवं प्रपद्ये ॥ २ ॥

உக்த்வா ப்ரஸூதிமஜசௌரி ஹரேச்வராணும்
ஸம்ஸூச்யதீபக ஸஹோக்திபிரன்யநிக்னும்
தாம் ஸன்யதாரயததர்வசிகாஹி யஸ்ய
தம் ஸர்வகாரண மனதி சிவம் ப்ரபத்யே ‖ 2

அதர்வ சிகோபநிஷத்தில் "ஸர்வமிதம் ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரேந்த்ராః தேஸம்பர ஸூயந்தே, ஸர்வாணி சேர்ந்த்ரியாணி ச ஸஹபூதைః ந காரணம், காரணநாந் தாதா, த்யாதா. காரணந்து த்யேயః ஸர்வைச்வர்ய ஸம்பந்நః ஸர்வேச்வரః சம்புராகாசமத்யே" என்று ப்ரும்மாதி தேவர்கள் உண்டாகின்றனர் என்பதை ப்ரஸ்துதமான பிரஹ்மாதிகளையும் அப்ரஸ்துதமான இந்திரியங்களையும் சேர்த்துக் கூறுவதால் தீபகாலங்காரம், ஸஹபூதைః என்பதால் ஸஹோக்த்யலங்காரம். இரு அலங்

களால் மற்றவருக்குப் பிறப்பையும், சிவனுக்கு பிறப் பில்லாமையையும் கூறி அந்த சம்பு ஹ்ருதயாகாசத்தில் தியானம் செய்யத்தகுந்தவர். அவரே எல்லாவற்றிற்கும் காரணம் என்று தீர்மானிக்கின்றது.

वेदान्तेषु प्रथम भवनं वर्णितं यस्य याम्यां
तद्वत्तस्य प्रसव वचसा जन्म तत् ख्यापयित्वा ।
यस्यैकस्य स्फुटमजनिता निश्चिता कारणस्य
ध्यायामस्तं जनिविहतये शम्भुमाकाशमध्ये ॥ ३ ॥

வேதாந்தேஷு ப்ரதம பவனம் வர்ணிதம்
யஸ்ய யாப்யாம்
தத்வத் தஸ்ய ப்ரஸவ வசஸா ஜன்ம தத்
க்யாபயித்வா ।
யஸ்யைகஸ்ய ஸ்புடமஜனிதா நிச்சிதா காரணஸ்ய
த்யாயாமஸ்தம் ஜனிவிஹதயே சம்புமாகாச
மத்யே ॥ 3

"ஏகோ ஹவை நாராயண ஆஸீத்" என்று வேதாந் தங்களில் நாராயணன் ஒருவன் இருந்தான். அவனிட மிருந்து மற்றவர் உண்டாயினர் என்று பிரும்ம ருத்ரர் களைவிட முன் இருந்தார் நாராயணன் என்பதையும் வேதங்கள் கூறுகின்றன. ஆனல் உண்டானர் என்று கூறுவதால் பிர்மாதிகளுக்கும் முதலில் இருந்தார் என்று அர்த்தம் சொல்லலாம். இங்கு ருத்ரன் உண்டானன் என்றல் ஸம்ஹார ருத்ரன் என்று அர்த்தம். எல்லாவற் றிற்கும் மூலமான சிவன் "அஜாதః" என்று உண்டாவ தில்லை என்பதை விளக்குகிறது. ஆகையினல் பிறப் பின்மைக்காக அந்த சம்புவை ஹ்ருதயத்தில் த்யானம் செய்கின்றோம்.

உண்டாகின்றனர். எல்லோரும் சிவலிங்கத்தை ஆராதிக்கின்றனர் என்பது விளக்கமாய் கூறப்பட்டுள்ளது. அவ்விதம் பெருமை பொருந்திய பரப்ரம்மமான சங்கரனுக்கு நமஸ்காரம் செய்யுங்கள். (நமஸ்கார ப்ரியன் சிவன்)

आस्तां सूक्ष्मं लिङ्गरूपत्वलिङ्गं स्याद्ब्रह्मेशानाख्ययैवाल्प मात्रम् ।
इत्येवेनावेदयत्सूत्रकारो यंब्रह्माख्यं तं प्रपद्ये महेशम् ॥ ५ ॥

ஆஸ்தாம் ஸூக்ஷ்மம் லிங்கருபத்வ லிங்கம்
ஸ்யாத் ப்ரஹ்மேசானாக்யயைவால்ப மாத்ரம்
இத்யேவேனுவேத யத்ஸூத்ர காரோ
யம்ப்ரும்மாக்யம் தம் ப்ரபத்யே மஹேசம் ॥ 5

(பொருள்) இவ்வளவு புராணங்களில் லிங்கருபியான சிவனே காரணம் என்பது லிங்கங்களால் தீர்மானித்த பொழுது ப்ரும்ம ஸூத்ரத்தில் "சப்தா தேவப்ரமிதঃ" என்ற இடத்தில் ஈசான சப்தமே சிவன் காரணம் என்பதை விளக்குகிறது என்று ஏன் சொன்னூர் என்றால் கஷ்டப்பட்டு பலப் புராணங்களைத் தேடி கண்டுபிடிக்கத் தேவையில்லை சப்தமே போதும் என்பதை ஸூத்ரக்காரர் வியாஸர் கூறுகிறுர். சப்தத்தை தவிர்த்து மற்றது இல்லையென்பதைச் சொல்லவில்லை. இவ்விதம் வேதாந்தங்களிலும் பிரம்ம ஸூத்ரத்திலும் புராணங்களிலும் உலகிற்கு காரணமான ப்ருஹ்மம் பரமசிவனே என்று கூறப்பட்டுள்ளதால் அவரையே சரணமடைகிறேன்.

இந்த ஐந்து சுலோகங்களில் ஜனனம் மரணம் என்ற மஹா பயத்தைப் போக்கிக் கொள்வதற்கு ஜனனத்திற்குக் காரணமான மன்மதனையும் மரணத்திற்குக் காரணமாக காலனையும் அழித்த பரமசிவன் ஒருவனையே சரணமடைய வேண்டும் என்பதை ச்ருதி ஸூத்ர - புராணங்களைக் கொண்டு மிக ஆழ்ந்த யுக்திகளால் ஸ்தாபித்தார் தீக்ஷிதரவர்கள்.

ளால் மற்றவருக்குப் பிறப்பையும், சிவனுக்கு பிறப் பில்லாமையையும் கூறி அந்த சம்பு ஹ்ருதயாகாசத்தில் தியானம் செய்யத்தகுந்தவர். அவரே எல்லாவற்றிற்கும் காரணம் என்று தீர்மானிக்கின்றது.

वेदान्तेषु प्रथम भवनं वर्णितं यस्य याम्यां
तद्वत्तस्य प्रसव वचसा जन्म तत् ख्यापयित्वा ।
यस्यैकस्य स्फुटमजनिता निश्चिता कारणस्य
ध्यायामस्तं जनिविहतये शम्भुमाकाशमध्ये ॥ ३ ॥

வேதாந்தேஷு ப்ரதம பவனம் வர்ணிதம்
யஸ்ய யாப்யாம்
தத்வத் தஸ்ய ப்ரஸவ வசஸா ஜன்ம தத்
க்யாபயித்வா ।
யஸ்யைகஸ்ய ஸ்புடமஜனிதா நிச்சிதா காரணஸ்ய
த்யாயாமஸ்தம் ஜனிவிஹதயே சம்புமாகாச
மத்யே ‖ 3

"ஏகோ ஹவை நாராயண ஆஸீத்" என்று வேதாந் தங்களில் நாராயணன் ஒருவன் இருந்தான். அவனிட மிருந்து மற்றவர் உண்டாயினர் என்று பிரும்ம ருத்ரர் களைவிட முன் இருந்தார் நாராயணன் என்பதையும் வேதங்கள் கூறுகின்றன. ஆனுல் உண்டானுர் என்று கூறுவதால் பிர்மாதிகளுக்கும் முதலில் இருந்தார் என்று அர்த்தம் சொல்லலாம். இங்கு ருத்ரன் உண்டானுன் என்ருல் ஸம் ஹார ருத்ரன் என்று அர்த்தம். எல்லாவற் றிற்கும் மூலமான சிவன் "அஜாதஃ" என்று உண்டாவ தில்லை என்பதை விளக்குகிறது. ஆகையினுல் பிறப் பின்மைக்காக அந்த சம்புவை ஹ்ருதயத்தில் த்யானம் செய்கின்ருேம்.

यद् भ्रूभंगैकवश्या विधिहरि गिरिशख्याति दाश्शक्ति कोटयः
यद् भृत्यादेव देवास्सकल भुवनगास्सन्नियच्छन्ति विश्वम् ।
यल्लिंगं सर्वदेवासुर मनुज मुखैः अर्च्यते विश्वरूपम्
तस्मै नित्यं नमस्यां प्रवितनुत परब्रह्मणे शंकराय ॥ ४ ॥

யத் ப்ருபங்கைக வச்யா விதிஹரி கிரிச
க்யாதிதாச் சக்தி கோட்யஃ
யத் ப்ருத்யாதேவ தேவாஸ் ஸகல
புவனகாஃ ஸந்நியச்சந்தி விச்வம் ।
யல்லிங்கம் ஸர்வதேவாஸுர மனுஜ முகைஃ
அர்ச்யதே விச்வரூபம்
தஸ்மை நித்யம் நமஸ்யாம் ப்ரவிதனுத
பரப்ருஹ்மணே சங்கராய ॥ 4 ॥

(பொருள்) வராஹ புராணத்தில் ருத்ர சக்திகள் ஒன்பது கோடி தாமஸ சக்திகள், விஷ்ணு சக்திகள் பதினெட்டு கோடி, ராஜஸ சக்திகள், பிரும்ம சக்திகள் எண்ணற்ற ஸாத்விக சக்திகள், இவைகளெல்லாவற்றையும் அவ்வளவு உருவங்களுடன் இருந்து அடக்கி ஆளுகிறார் பரமேச்வரன் என்றும், சிவபுராணத்தில் பூமியிலும் அந்தரிக்ஷத்திலும் ஸ்வர்க்கத்திலும் உள்ள ருத்ரர்கள் நம்மைக் காப்பவர்கள் ஸாம ருத்ரத்தில் கூறப்பெற்றவர்கள் பரமசிவனுடைய கிங்கரர்கள் என்று கூறப்பட்டுள்ளது. அங்கு திக்ஷ்ணதஃ ஆசாஸதஃ என்று பிரும்மாண்டத்தை காட்டிலும் வெளியிலுள்ளவர்களும் சிவ ப்ருத்யர்கள் என்று கூறப்படுகிறது. சிவபுராணம் வாயு ஸம்ஹிதையில் லிங்காகாரமான சிவனிடமிருந்து பிரும்ம விஷ்ணு ருத்ரர்கள் மற்றுமுள்ள தேவர்கள்

உண்டாகின்றனர். எல்லோரும் சிவலிங்கத்தை ஆராதிக்கின்றனர் என்பது விளக்கமாய் கூறப்பட்டுள்ளது. அவ்விதம் பெருமை பொருந்திய பரப்ரம்மமான சங்கரனுக்கு நமஸ்காரம் செய்யுங்கள். (நமஸ்கார ப்ரியன் சிவன்)

आस्तां सूक्ष्मं लिङ्गरूपत्वलिङ्गं स्याद्ब्रह्मेशानाख्ययैवाल्प मात्रम् ।
इत्येवेनावेदयत्सूत्रकारो यंब्रह्माख्यं तं प्रपद्ये महेशम् ॥ ५ ॥

ஆஸ்தாம் ஸூக்ஷ்மம் லிங்கரூபத்வ லிங்கம்
ஸ்யாத் ப்ரஹ்மேசானாக்யயைவால்ப மாத்ரம்
இத்யேவேனுவேத யத்ஸூத்ர காரோ
யம்ப்ருஹ்மாக்யம் தம் ப்ரபத்யே மஹேசம் ॥ 5

(பொருள்) இவ்வளவு புராணங்களில் லிங்கரூபியான சிவனே காரணம் என்பது லிங்கங்களால் தீர்மானித்த பொழுது ப்ருஹ்ம ஸூத்ரத்தில் "சப்தா தேவப்ரபிதஃ" என்ற இடத்தில் ஈசான சப்தமே சிவன் காரணம் என்பதை விளக்குகிறது என்று ஏன் சொன்னார் என்றால் கஷ்டப்பட்டு பலப் புராணங்களைத் தேடி கண்டுபிடிக்கத் தேவையில்லை சப்தமே போதும் என்பதை ஸூத்ரக்காரர் வியாஸர் கூறுகிறார். சப்தத்தை தவிர்த்து மற்றது இல்லையென்பதைச் சொல்லவில்லை. இவ்விதம் வேதாந்தங்களிலும் பிரம்ம ஸூத்ரத்திலும் புராணங்களிலும் உலகிற்கு காரணமான ப்ருஹ்மம் பரமசிவனே என்று கூறப்பட்டுள்ளதால் அவரையே சரணமடைகிறேன்.

இந்த ஐந்து சுலோகங்களில் ஜனனம் மரணம் என்ற மஹா பயத்தைப் போக்கிக் கொள்வதற்கு ஜனனத்திற்குக் காரணமான மன்மதனையும் மரணத்திற்குக் காரணமாக காலனையும் அழித்த பரமசிவன் ஒருவனையே சரணமடைய வேண்டும் என்பதை ச்ருதி ஸூத்ர - புராணங்களைக் கொண்டு மிக ஆழ்ந்த யுக்திகளால் ஸ்தாபித்தார் தீக்ஷிதரவர்கள்.

மாயூரம்

## ஸ்ரீ தர்மக்ஞ M. ராமனாத தீக்ஷிதர்



ஸ்ரீமான் அப்பய்ய தீக்ஷிதரவர்களின்
மரபில் பன்னிரண்டாவது
தலைமுறையில் தோன்றியவர்



## எமது இதர புஸ்தகங்கள்

| | | ரூ. | பை |
|---|---|---|---|
| 1. | பாரத ஸ்தல யாத்ரை | 10 | 00 |
| 2 | ஸாமஸார ஸர்வஸ்வம் (ஸம்ஸ்க்ருதம், ஆங்கிலம், ஹிந்தி) | 8 | 00 |
| 3. | தேவதாத்யாம் ஸம்ஹிதோபநிஷத் பாஷ்யம் - ஸம்ஸ்க்ருதம் | 2. | 50 |
| 4. | ஆசார முறை (தமிழ்) | 3 | 00 |
| 5. | .. (ஆங்கிலம்) | 3 | 00 |
| 6. | தேவீ ஸ்தோத்ர ரத்ன மாலா 27 ஸ்தோத்ரங்கள் அடங்கியது | 2. | 25 |
| 7. | ஸர்வ ப்ராயச்சித்த ப்ரயோகம் | 1 | 00 |
| 8 | சாகம்பரீ ஸஹஸ்ரநாமம் - உபாக்யானத்துடன் | 1 | 00 |
| 9. | [illegible] ஸ்துதி மஞ்சரீ | 1 | 25 |

லக்ஷ்மி விஜயம் ப்ரஸ், திருவல்லிக்கேணி, சென்னை 5.